உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சிவபுரி என்று வழங்குந்

# திருநெல்வாயிற்புராணம்

---

இது

யாழ்ப்பாணத்து வதிரி

வித்துவான்


## சி. நாகலிங்கபிள்ளையால்


இயற்றி,

மேற்படி தலத்திருப்பணி செய்த

கோட்டையூர் ஸ்ரீமாந் க. வீ. சொ. வீ.

அழகப்ப செட்டியார் அவர்கள்

பொருளுதவி கொண்டு


தமது

கரவெட்டி வடக்கு

ஞானசித்தியந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

1934

# படலங்களின் அட்டவணை.

சிவமயம்

## திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் அருளிச்செய்த
## சிவபுரி என்கின்ற திருநெல்வாயில்
# தேவாரப்பதிகம்.

இராகம் பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

புடையினார் புள்ளிகால் பொருந்திய
மடையினார் மணிநீர் நெல்வாயிலார்
நடையினால் விரற்கோவணம் நயந்
துடையினாரெமதுச்சியாரே. (௧)

வாங்கினார் மதின்மேற் கணைவெள்ளந்
தாங்கினார் தலையாய தன்மையர்
நீங்குநீர நெல்வா யிலார்தொழ
வோங்கினாரெம துச்சியாரே. (௨)

நிச்சலேத்து நெல்வா யிலார்தொழ
விச்சையா லுறை வாரெமீசனார்
கச்சை யாவதோர் பாம்பினார் கவி
னிச்சையாரெம துச்சியாரே. (௩)

மறையினார் மழு வாளினார்மல்கு
பிறையினார் பிறை யோடிலங்கிய
நிறையினார நெல் வாயிலார்தொழு
மிறைவனாரெம துச்சியாரே. (௪)

விருத்தனாகி வெண்ணீறு பூசிய
கருத்தனார் கன லாட்டுகந்தவர்
நிருத்தனாரநெல் வாயின்மேவிய
வொருத்தனாரெம துச்சியாரே. (௫)

காரினார் கொன்றைக் கண்ணியார் மல்கு
பேரினார் பிறை யோடிலங்கிய
சீரினா ரநெல் வாயிலார்தொழு
மேரினா ரெம துச்சியாரே. (௬)

ஆதியா ரந்த மாயினார்வினை
கோதியார் மதில் கூட்டழித்தவர்
நீதியா ரநெல் வாயிலார்மறை
யோதியா ரெம துச்சியாரே. (௭)

பற்றினா னரக் கன்கயிலையை
யொற்றினா ரொரு கால்விரலுற
நெற்றியா ரநெல் வாயிலார்தொழும்
பெற்றியா ரெம துச்சியாரே. (௮)

நாடினார் மணி வண்ணனான்முகன்
கூடினார் குறு காத கொள்கையர்
நீடினா ரநெல் வாயிலார்தலை
யோடினா ரெம துச்சியாரே. (௯)

குண்ட மண்டுவர்க் கூறை மூடர்சொற்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயி லார்நஞ்சை
யுண்ட கண்ட ரெம் முச்சியாரே. (௧௦)

நெண்பயங்குநெல் வாயி லீசனைச்
சண்பைஞான சம் பந்தன் சொல்லிவை
பண்பயன் கொளப் பாட வல்லவர்
விண்பயன் கொளும் வேட்கை யாளரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்

---

யாழ்ப்பாணத்து நவிண்டில்

பிரமஸ்ரீ

சு. கனகசபாபதிக்குருக்கள் அவர்கள்

இயற்றியவை.

பொன்னக ரதனை மானும் பொலிவளக் கோட்டை யூரின்
மன்னிய சீர்த்தி மிக்க மாதன வசியர் கோனைப்
பன்னுவீ ரப்ப வேளின் பயனுறு சுதனும் பாரின்
மின்னுநற் றரும தான மிகவிழைந் தியற்று வோனும். (1)

பரனடிப் பத்தி வாய்மை பரவுநல் லொழுக்க மாதி
விரவுநீர் மையனு மாகி விளங்கழ கப்ப வள்ள
லரனமர் சிவபு ரிப்பே ரறைந்திடு திருநெல் வாயின்
மரபுறு சரிதந் தன்னை மதிவட மொழியி னின்றே, (2)

தண்டமிழ்ப் பாவி னாலே தகுமுறை புராண மாகக்
கண்டனை தருதி யென்றே கட்டுரைத் திட்டா னீது
கொண்டன னாகிக் குன்றக் கூறன்முன் னேத மின்றி
யெண்டக வியற்றி யீந்தா னெவன்மற் றிவன்றா னென்னில். (3)

ஆரிய மொழியி னோடு மரியபன் னூலு மேனைச்
சீரிய திராவி டத்திற் சேருறு நூலு மாய்ந்தோன்
நாரியோர் பாகன் றன்னை நாளுமர்ச் சனைசெய் சீலன்
கூரிய மதியோ னாகிக் குவலய மொளிரு நீரான். (4)

மண்ணவ ரேத்த நின்ற மாதல மாகு மேன்மை
நண்ணிய சதிர்கா மத்தி னற்கதை புராண மாகத்
திண்ணிய புலவோர் தேரத் திட்பநுட் பமதாச் சொற்றோன்
[illegible]ண்ணிய னாகி யாருங் காதலித் திடவே வாழ்வோன். (5)

பதிபசு பாச வுண்மை பக்குவர்க் குணர்த்து மாசான்
கதிசிவ சமய மாண்பு கடைப்பிடித் துலகோ ருய்ய
வதிபிர சங்க மாரி யமைவுறப் பொழியு மேகந்
துதிகிரித் தீப மென்னத் துலங்குறு தோன்ற லானோன். (6)

அறைந்திடு மகத்து வஞ்சே சாவடு துறையா தீன
முறைந்திடு பெரியோர் தாமு முவந்துப சரிக்குஞ் சீரோன்
நிறைந்திடு புலவ னாகி நின்றதா யோத ரப்பேர்
மறைந்திடாப் பெற்றி யாளன் மனமகி ழனுச னானோன். (7)

உற்றசீர் யாழ்ப்பா ணத்தி லோங்கிய வதிரி வாசன்
மற்றிணை நீரும் வேளாண் மரபுயர் சின்னத் தம்பி
முற்றிய தவத்து வந்தோன் முதல்வனா ரருளை யென்றும்
பற்றுறு நாக லிங்க பண்டித னருகு மாதோ. (8)

---

அச்சுவேலி

பிரமஸ்ரீ

## ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்கள்

இயற்றியது.

சித்திதரு நெல்வாயிற் சிவபுரே சர்க்குச்
செய்யதமிழ்ச் சொற்களெனு மலர்க டம்மால்
பத்தியெனு நார்தாங்கித் தொடுத்தல் செய்த
பவமகற்று புராணப்பா வலங்கல் வேய்ந்தான்
நத்தமரு வயல்வதிரி நகரம் வாழ்வோன்
நற்றமிழு மாரியமு நன்கு கற்றோன்
வித்துவசற் றுபோதகம் பிள்ளைக் கனுசன்
வியனுறுநா கலிங்கப் புலவன் றானே.

ஆர்மை நகர் பிரமஸ்ரீ

# சிவ சதாசிவ குரு அவர்கள்

இயற்றியவை.

---

சீர்மேவு சோழவள நாட்டின்மேய சிவபுரத்தின்
வடறாலி லுய்ந்து
பார்மேவு மிவ்வுலகின் மாந்தரெல்லாம் பயன்பெறவே
தமிழ்மொழியிற் பாடு கென்று
கார்மேவு மாடமலி கோட்டையூரிற் கனகுணஞ்சேர்
வீரப்பன் மைந்த னாரும்
பேர்மேவு மழகப்ப வணிகர்கோமான் பெரும்பொருளீந்
திடவிரித்து விளம்ப லுற்றான். (1)

மாட்சிமிகும் யாழ்ப்பாண வடபான்மேவு வதிரிநகர்
விளங்கவரு புலவர் செம்மல்
காட்சிபெறு சின்னத்தம்பிப் பேர்வாய்ந்த கண்ணியன்றன்
சுதன் கடவுட் பத்தி மிக்கான்
நீட்சியுறு மிருமொழியும் பயின்றதீர னிலைபெறு சைவத்தி
னரும்பொருளை தேடி மிக்கான்
ஆட்சியுறு பிரசங்கஞ் செயும் வாசால னன்புமிகு
நாகலிங்க வறிஞன் றானே. (2)

சிவமயம்

சிவபுரி யென்று வழங்குகிற

# திருநெல்வாயிற்புராணம்

:o:

காப்பு

சீர்பூத்த சதுர்மறையிற் றிகழுமுதற் பொருளாகிப்
பார்பூத்த வுமையம்மை பிடியென்னு முருக்கொள்ளக்
கார்பூத்த திருமிடற்றோன் கரியுருவங் கொண்டுபெற்ற
பேர்பூத்த புழைநெடுங்கைப் பெருந்தகையை வணங்கல்செய்வாம்.

வேறு

நாடிய திருநெல்வாயி னலந்திகழ் புராணகாதை
பீடிய தமிழாற் பாடப் பேரருள் வழங்கு மென்ப
பாடிய லுச்சி யப்பர் பயந்தருள் புதல்வ னான
கூடிய வொருவெண் கோட்டுக் குஞ்சர முகவன் றாளே. (௨)

---

## கடவுள் வாழ்த்து

சிவபுரேசர்

பலமுதல் களைந்த ஞானப் பண்பினர் விரும்பி வாழுஞ்
சிவபுரப் பெயரி னோங்கு திருப்பதி யமர்ந்த வுச்சி
நவவடி வமைந்த நாத னலங்கிளர் கமல பாதஞ்
சிவமணங் கமழும் வண்ணஞ் சிரமிசைக் கொள்வா மன்றே. (௩)

கனககவல்லி யம்மை

ஓங்கிய புவன மெல்லா மொருங்குபெற் றெடுத்த கன்னி
பாங்கியல் சிவபு ரேசன் பாதிமெய் பகிர்ந்து கொண்ட
தேங்கிய கருணை வாரித் தேவியாங் கனக வல்லி
பூங்கழற் கமல பாதம் போற்றிசெய் திடும்மை நீர்வாம். (௪)

சபாநாயகர்

மலரயன் மாயன் காணு மனுவைந்தே வடிவ மாகி
யிலகுறு கனக மன்றி லேந்திழை வல்லி காணப்
புலமுறு புலியும் பாம்பும் போற்றுதல் செய்ப நாளு
மலகில்சீர்த் திருக்கூத் தாடு மாதியைத் துதித்து வாழ்வாம். (௫)

சிவகாம சுந்தரி யம்மை

நீருறு மீனந் தானு நிலவுறு குஞ்சைப் பார்த்தே
யேருற வளர்த்தல் போல வெண்ணிலா வுயிர்க டம்மைப்
பேருறு கனக மன்றிற் பெருநடங் கண்டு காக்கும்
வாருறு கொங்கை மாதின் மலரடி வழுத்தல் செய்வாம். (௬)

விநாயகக்கடவுள்

டொருங்குமே ரிடையூ றெல்லாம் பொன்றிடப் புவன மீதே
திருந்திய கரும மெல்லாஞ் செவ்விதி னடைபெற் றுறுங்கப்
பெருந்திரு மடந்தை வாழப் பெற்றிடு திருநெல் வாயி
லிருந்தரு ளிபமு கத்தோ னிணையடி யேத்தி வாழ்வாம். (௭)

தக்ஷிணாமூர்த்தி

மும்மலச் சார்பி னாலே முழுமுதற் பொருளைக் காணார்
வெம்மைகொள் பிறவி வேலை வீழ்ந்திடு சனக னாதி
செம்மைகொள் மனத்தி னோர்க்குச் சிவமுத லடையு ஞானங்
கைம்மல ரதனாற் காட்டுங் கடவுளைக் கருதி வாழ்வாம். (௮)

வைரவக்கடவுள்

மாதொரு பாகத் தண்ணன் மனத்திடை நினைப்பத் தோன்றி
மேதகு பிரமன் கொண்ட மென்றலை நகத்தாற் கிள்ளி

## கடவுள்வாழ்த்து

மாதவன் முனிவர் வானோர் மன்னுடற் குருதி கொண்டோன்
றூறுகு மலரென் பாதந் தலைமிசைக் கொள்வா மன்றே. (௯)

## வீரபத்திரக்கடவுள்

தக்கனார் தலையை மாற்றிச் சார்ந்திடு தேவர்க்கெல்லாந்
தக்கதோர் தண்ட மாற்றித் தகவிலா வேள்வி மாற்றி
மிக்கதோர் நிந்தை தன்னான் மேவிய பாவந் தீர்த்த
செக்கவே சிவந்த மேனிச் சேவகன் சரணம் போற்றி. (௧0)

## சுப்பிரமணியக்கடவுள்

பன்னிரு கரனே போற்றி பகவனே குகனே போற்றி
யென்னிரு கண்ணே கண்ணி லிருந்தருள் மணியே போற்றி
பொன்னுல கதனைக் காத்துப் புலமையா யுடல மொன்றின்
மன்னவீ ருயிரை வைத்த மைந்தனே போற்றி போற்றி (௧௧)

## கலைமகள்

வேறு

திருமாது மருமமுறத் திகழுமையாள் பாகமா
விருமாத ரினுமேலா யிருக்கின்ற கருத்தினாலோ
பிரமாவின் றிருநாவிற் பிறங்குயிரின் பெருநாவி
லொருவாம லுறைவாளை யொழியாம னினைந்திடுவாம். (௧௨)

## திருநந்திதேவர்

வேறு

சரியையே கிரியா யோகஞ் சார்ந்திடு மேலோர் வாழும்
பெரியதோர் வெள்ளி வெற்பிற் பிறங்குபொற் கோயில் வாயி
லுரியபொற் பிரம்பொன் றேந்தி யுறுநெருக் கொதுக்கிக் காக்கு
மரியநற் றொண்டு செய்யு மண்ணலை யகத்துள் வைப்பாம். (௧௩)

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

வேறு

மேன்மைகொள் சைவவுண்மை மேதினி தனில்விளங்க
நான்மறையி னுட்பொருளை நாமறிய நவின்றருளித்

தேன்பொதிந்து தித்திக்குஞ் செந்தமிழிற் புனைசம்பந்தன்
கான்பொழியு மலர்ப்பாதங் கரங்குவித்து வணங்கல்செய்வாம். ()

## திருநாவுக்கரசு நாயனார்

மெய்யளிசூழ் மலர்ச்சோலை முனைப்பாடி வாழவரு
மெய்ஞ்ஞானத் தவமுனிவன் வேதமுத றிருநாமம்
வையமிசை வளர்ந்தோங்கத் தேவாரம் வாய்மலர்ந்தோன்
செய்யதாண் மலர்த்துணையைச் சிரமீது சேர்த்திடுவோம். (௧௫)

## சுந்தரமூர்த்தி நாயனார்

வேறு

புண்ணியன் மெய்யிற் பூசும் பூதிகண் மணியு மைந்தாய்
நண்ணிய வெழுத்தின் வீறு நானிலத் துயர்ந்து தோன்ற
வெண்ணிலற் புகஞ்செய் தீசு னிணையடி பாடு நாவற்
றிண்மைவன் றொண்டன் பாதஞ் சென்னியிற் கொண்டு வாழ்வா[ம். ()

## மாணிக்கவாசக சுவாமிகள்

வேறு

அடையார்க டிரிபுரமன் றெரித்தானை யடலாழிப்
படையானு நான்முகனும் பார்க்கரிய பரம்பரனை
விடையானை முன்பாடி வேலைசெய்யுங் கூலியாக
வுடையானைத் திருவாத வூரானை யுளங்கொள்வாம். (௧௭)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

செய்யுள் ௧௭

---

# அவையடக்கம்

பொன்னிமா நதிநீர் பாய்ந்து புதுவளங் கொழிக்கச் சோழ
மன்னவ ரரசு செய்து மாநிலம் புகழு நாட்டிற்
றன்னிகர் தானே யான சிவபுர மகிமை தன்னைப்
பன்னிய வடநூற் காதைப் பாப்பினத் தமிழி னாலே. (௧

## அவையடக்கம்

மேன்மைகொள் வணிகச் செல்வன் மேவியத் தலத்தி னாய
பான்மையிற் கோயிறன்னைப் புதுப்பணி புரிந்த வள்ள
ஞான்முறை பாடு கென்று நுவன்றனன் றுக நாதே
ஞான்பொதி யுடலைக் கொண்ட வுழுபயன் பலித்த தென்று. (௨)

திருவருட் செயலை யுன்னிச் செய்வதை யறியா தந்தோ
பெருமகிழ் வுளத்துட் கொண்டு பேரறி வுடையேன் போல
வுரைசெயத் தொடங்கி யிந்த வுலகினிற் பழிமேற் கொண்டேன்
பெரியர்சொன் மருமை யொன்றே பேறெனக் கொண்டு மன்றே.

சங்கொடு பவள முத்தஞ் சாகரத் துதித்த வேனுந்
தங்குநீர் கைக்கு மென்று தரிக்கிடா தவரு முண்டோ
விங்கிது போலத் தீய வென்கவி வழுவென் றாலுஞ்
சங்கரன் சரிதமென்று சான்றவ ருவந்து கொள்வார் (௪)

சூதமா முனிவன் முன்னாட் சொல்சிவ புரத்தின் மேன்மை
யேதமில் வடநூ லாலே யியம்பின னதனை யானும்
பேதம தில்லா வண்ணம் பெருமைசேர் தமிழி னாலே
யோதுவ தியலா தேனு மொருவகை சொலத்து ணிந்தேன். (௫)

மறையுணர் வியாச மேலோன் வகுத்தருள் புராணந் தன்னுட்
பிறையணி பெருமாற் கான பெட்புறு காந்த மென்றே
யறைதரு புராண மாறு சங்கிதை யுடைய தாகு
நிறைதரு முதலாய் நிற்கு நீடுசங் கிதையின் மன்றே. (௬)

செப்பிய தாகு மிந்தச் சிவபுர மகிமை யெல்லா
முப்புவ னத்தார் போற்று மகத்திய முனிவ னென்பான்
றிப்பிய மாகச் செய்த செந்தமிழ் மொழியி னாலே
யிப்புவி யுணரு மாற்ற லியம்புவன் விருத்த யாப்பால் (௭)

நிகழ்ந்திடு கலியிற் சென்று நீடிய வருட மைந்தாய்த்
திகழ்ந்தவா யிரமேன் முப்பா னேடைந்து செல்லா நிற்பப்
புகழ்ந்திடு திருநெல் வாயிற் புராணநூல் புலவ ரெல்லா
மகிழ்ந்திடு மாறு பாடி முடித்தனன் வதிரி தன்னில். (௮)

மத்தமுங் கொன்றைப் பூவு மலிதரு சடைமேற் கொண்டு
தத்துவங் கடந்து நின்ற சங்கரற் குரிய தான
வுத்தம தலத்தின் மேன்மை யுரைத்திடு மிதன்பேர் கூறிற்
சித்தியே திருநெல் வாயிற் சிறப்புறு புராண மென்பாம். (௯)

அவையடக்க முற்றிற்று.

ஆக. செய்யுள் ௨௯

---

# நைமிசப் படலம்



முன்னொரு ஞான்று கன்னின் முதுநகர்க் காஞ்சி மேய
வன்னவா கனத்தன் பாங்க ரருந்தவ முனிவர் சென்று
பொன்னடி வணங்கிப் போற்றிப் பூவுறை தேவே யாங்க ளென்
மன்னிய தவஞ்செய் தற்கோர் மாதலம் பகர்வா யென்றார். (௧)

ஓங்கிய முனிவர் கேட்ட வுரையினை யுணர்ந்து வேத
னாங்கொரு தருப்பை கொண்டே யணிபெறு நேமி யாக்கிப்
பாங்குட னதனை முந்நீர்ப் பார்மிசை யுருட்டி நீவி
ரீங்கிது சென்று தங்கு மிடத்தினைக் கொண்மி னென்றான். (௨)

என்றலுந் தவத்தோர் நாடி யேகுறு நேமி பின்னர்ச்
சென்றனர் தருப்பை நேமி திகழ்கங்கை யடபாற் சென்று
நின்றதங் கதனைக் கண்டு நீடிய தவந்தான் செய்தற்
கொன்றிய விடமி தாமென் றுளமகிழ்ந் துறைந்தா ரங்கண். (௩)

மலர்மிசை வாழு மண்ணல் வரவிடு நேமி சென்றாங்
கிலகிய கார ணத்தா லெய்ந்தநை மிசமே யென்பர்
நிலவுமவ் வனத்தின் கண்ணே நெடுந்தவ முனிவ ரெல்லா
மலகில்பல் பவங்கள் போக்கு மருந்தவம் பலவுஞ் செய்தார். (௪)

பலவொடு கதலி தெங்கு பாதிரி செருந்தி பூகங்
குலவிய துணர்ப்பூங் கொன்றை கோங்கமே யசோகு புன்னை

நலமலி வேங்கை வன்னி நறுமலர் பூக்கு முல்லை
தலமலி தமாலங் காயா சண்பக வனங்க ளெங்கும். (௫)

மடங்கலுஞ் சிறுக ஞால்வாய் மதகய மினிது போலும்
விடங்கலுழ் பேழ்வாய்ப் பாம்பும் விரும்புமா மயூரந் தானுங்
கொடுங்கதப் புலியு மானுங் கொண்டதம் பகைமை யின்றி
யிடங்களி லுலாவித் தங்க ளினமென வாழு மங்கண். (௬)

அந்தமா வனத்தின் கண்ணே யருமறை யோதுஞ் சாலை
முந்துநற் புராண சாலை முத்திடும் யோக சாலை
சந்தமார் வேள்விச் சாலை சாற்றுமா கமத்தின் சாலை
சந்தியா நியமச் சாலை சாற்றிடும் பலவா மன்றே. (௭)

வஞ்சமில் முனிவர் கூறு மாமறை முழக்கு மேலை
மஞ்செழுந் துருவா மீச னாகம வொலியுங் காள
நஞ்சணி மிடற்றி னானை நலம்பெறப் பூசித் தேத்தும்
விஞ்சிய வொலியுங் கூடி வேலைவா யொலியின் மேலாம். (௮)

முருக்கிதழ் மாதர் தங்கள் முகமென மலர்ந்து தோன்று
மருக்கமழ் கமலந் தன்பூ வாவியு மன்னார் கண்போற்
றிருக்கிளர் குவளை பூத்துத் தெளிந்தநீர்த் தடமுஞ் சூழ்ந்த
வரக்கித ழாம்ப லேறு மடுக்களு மாங்கு மல்கும். (௯)

அன்னமு மழலைத் தீஞ்சொல் லரியதோர் கிளியு மாடன்
மன்னிய மயிலுஞ் செங்கான் மாமட நாரை யோடு
பன்னுசொற் பூவை கம்புள் பாரப்பொடு குயிலும் பல்கித்
தன்னிகர் தானே யாகித் தக்கதை மிசைந்தான் றோன்றும். (௧௦)

திருப்பொலி பூதி கண்டி திகழுற மேனி பூண்டோர்
கருப்பயி றுயரை மாற்றக் காமுறு சிந்தை கொண்டோர்
தருப்பொலி நைமி சத்திற் சார்தரு முனிவர் யாரும்
விருப்புட னொன்று சேர்ந்து வேள்வியொன் றியற்ற லுற்றார் (௧௧

அந்தமா வேள்வி யீற்றி லருந்தவச் சூத னென்பான்
சந்தமாந் திருவெண் ணீறு தரித்திடு மெய்யன் பாச

பங்கமு மகற்றுஞ் சண்டி பாகநா ஞ்சிரமே காது
கந்தப முன்னை தன்னிற் சுவிறுறப் பூண்டு வந்தான். (க௨

வந்தமா முனியை வாழ்த்தி யிருந்தமா முனிவர் யாருஞ்
சிந்தையின் மகிழ்ச்சி பூப்பச் சிவனென வணங்கி நீடு
பந்தமி லன்பி னுளே யமிழ்தென முகமன் கூறிச்
சந்தநற் பீட மீது சார்ந்திட விருத்திப் பின்னர் (க௩)

விருப்புமா மலரா னந்தேனென் விளங்கிய வடியைப் பூசித்
தருமம்பொருட் பயனு மெல்லா மாய்ந்திடுஞ் சூத நின்பாற்
பெருமைபொருட் புராணம் யாவும் பேசிடச் சுருக்க மாயும்
விரிந்திடு முறையுங் கேட்டோம் வியாசன்பா லுணர்ந்த மேலோய் (

தஞ்சினிடை யடைந்தோர் பாவந் தணித்திடு தன்மைத் தாகி
மன்னிய தரும தான மாதவஞ் சிறிதென் றாலும்
பன்னிய வதனைப் பத்து நூறெனும் பங்கே யாக்கிச்
சென்னியிற் பிறையை வைத்த சேவக னுறைவ தாகி. (க௫

வேறு

செய்தவுடன் பயனளிக்குஞ் சிறப்பினதாய் மறைவுமாகிச்
செய்தவஞ்சேர் முனிவர்களுந் தேவர்களும் வழிபட்டேத்தி
யெய்தவரும் பெருமையெல்லா மேற்றபடி பெற்றதாகி
யுய்திதருஞ் சிவதலமொன் றுரைத்தருளல் வேண்டுமென்றார். (க௬)

ஆங்கதனைக் கேட்டசூத னரும்பதியாந் திருநெல்வாயி
லோங்கரிய பரம்பரனை யின்மலையாங் கனகமாதைத்
தாங்கரிய நெஞ்சகத்தே தரித்திடச்செய் தடலமெங்கும்
வீங்கியபு ளகம்போர்ப்ப விரதமது டையோனாகி. (க௭)

உரமிருந்த முனிவருக் குரைக்கின்றான் முனிவர்களே
வரமிருந்த வுலகுக்கெல்லாம் வாய்ந்தவொரு நன்மையதாய்த்
தரமிருந்த புண்ணியமே யுருவதாகிச் சித்தியெல்லாங்
கரமிருந்த கருநெல்லிக் கனிபோல விளங்குவதாய். (க௮)

வேறு

நன்மையே தருவதொன்றை நாடிநீர் வினாதல் செய்தீர்
தன்மையா மிதனை நோக்கிற் சார்ந்ததோர் பிறவி தன்னை
யின்மையாச் செய்தல் வேண்டு மென்னுமோ ரெண்ண மாரும்
புன்மையைப் போக்குஞ் செய்கை பூசுரர் கடமை யன்றோ. (௧௯)

பிறவியை யகற்று மெண்ணம் பிறந்ததா னீவிர் யாரு
மறவினை யாவுஞ் செய்தீ ராவதி லைய முண்டோ
நறையுறு மிதழி வேய்ந்த நாதன்றன் றலங்க டம்மைப்
பிறையணி பிரான்றன் றொல்லைப் பெருமையைத் தீர்த்தந் தன்னை.

எப்பற்று மறுத்தா ரேனு மிறைவனார் கமல பாத
மெய்ப்பற்றே பற்றி யுள்ள மேன்மையைப் பூண்டோர் வாழுந்
திப்பியப் பதியைக் கேட்குஞ் சிந்தைதா னெவனுக் குண்டோ
விப்புவி யவனை யன்றோ விறைவனென் றியம்பு மென்றும். (௨௧)

ஆதலின் முனிவீர் காணீ ரனைவரும் பெறுபே றுற்றீ
ரீதுநந் துணிவே யாகு மிதுபொழு தறைதுங் கேண்மி
னோதரு மேன்மை கொண்ட வொளிமய தலத்தின் மாண்பு
வேதனு மியம்ப வொண்ணா மேன்மைய தாகு மன்றே. (௨௨)

வாதரா யணனால் முன்னர் வகுத்திடு புராணந் தன்னுண்
மேதகு காந்தங் கொண்டு விளம்புசங் கிதைக ளாறிற்
றீதறு சனற்கு மார சங்கிதை திருநெல் வாயிற்
பேதமில் சரிதந் தன்னைப் பேசுவ தாகு மன்றே. (௨௩)

அத்தகு திருநெல் வாயி லரியமான் மியத்தை யீங்கே
யுத்தம வன்பி னாலே யுரைக்குதுஞ் சுருக்கி முன்னர்த்
தத்துவ முணர்ந்த கேள்வித் தவமுனி வரரோ யென்றான்
வித்தக ருய்ந்தோ மென்றார் விளம்புவன் சூதன் மன்னோ. (௨௪)

நைமிசப்படல முற்றிற்று.

ஆக செய்யுள். ௩௦.

# பதிகம்

பொங்குவெண் டிரைகள் வீசிப் புதுக்கரை யுடைக்குந் தெண்ணீர்க்
கங்கைசூழ் காசி காஞ்சி கடிமலர் மங்கை யேத்தும்
பங்கமில் திருவா ரூரே பாடல ரணியந் தில்லை
துங்கமார் துவாத சாந்தத் தொல்பதி தம்முண் மேலாய் (௧)

மூவகைச் சிறப்பும் வாய்ந்த முதுபதி திருநெல் வாயிற்
காவளர் தலத்தின் மாண்புங் கண்ணுவன் முதலாம் யோக
காவலர் வணங்கி யேத்துங் கடிநக ரதற்கு நான்காய்
மேவிய வெல்லை கூறி விளக்கிய மேன்மை தானும். (௨)

ஆக்குவான் றொடங்கிச் சற்று மத்தொழி னிகழா தாக
வாக்கினால் வழுத்த வொண்ணா வரதனைப் பிரம தேவன்
நோக்கினாற் பூசை செய்து நொய்தெனக் கண்டு பின்னர்ப்
போக்கிலாப் படைப்பு வன்மை புதுக்கிய மகிமை தானும். (௩)

முப்புர மழித்த போது முழுதுடல் வருத்தஞ் செய்த
வெப்பினை யொழிக்க வேண்டி விமலனார் கண்ணிற் சிந்து
மப்புவே தீர்த்த மாகி யாவரு முழுகும் வண்ணந்
திப்பிய கிருபா சிந்துத் தீர்த்தமாய் வந்த வாறும். (௪)

வரம்பெறு கனக வல்லி வண்கழல் வழிபட் டேத்தி
யுரம்பெறு தன்பேர் கொண்டவொரு பெருந் தீர்த்த மாக்கிப்
பரம்பெறு தவத்தைச் செய்து பாரதி யென்னு மங்கை
பிரமனைக் கணவ னாகப் பெற்றதோர் பண்பு தானும். (௫)

திருமறு மார்பன் முன்னாட் சிவபுரப் பதியிற் சேர்ந்தே
யொருமலர் குறையக் கண்டோ ரொளிவளர் தன்கண் ணொன்றும்
பெருமலர் கையிற் கொண்டு பெட்புடன் பூசை செய்யச்
சுரிமுகச் சங்க மீந்த தொல்சிவ லிங்க மாண்பும். (௬)

நான்மறை புகழ்வ தாகி நன்மையே பயப்ப தாகி
மேன்மைகொள் சோதியாகி வெதுப்புறு பாவம் போக்கித்

தேன்மலர்க் கொன்றை வேணித் தேவன்றன் மேனி யாகு
மான்றதோ ரிலிங்க பூசை யருவிதி கூறு மாறும். (எ)

விண்பயி றிருநெல் வாயில் விளங்கிய கனக மாதைக்
கண்பயின் மணியை வானோர் கற்பகக் கொழுந்தை யெங்கள்
பண்பயில் மொழியா டன்னைப் பாவனை யகத்திற் செய்தே
யெண்பயில் புறத்தும் பூசை யியற்றிடு வகைமை தானும். (அ)

நூற்றுவர் புதல்வர் மாள நோக்கிய சோகத் தீயாற்
றேற்றுத லின்றி வாடிச் செய்தவ வசிட்ட னென்பான்
போற்றியே திருநெல் வாயிற் புனிதனைப் பூசை செய்து
மாற்றியச் சோகந் தன்னை மனத்தெளி வடைந்த வாறும். (கூ)

மன்னிய வந்த ணாளர் மரபினி லவத ரித்தோன்
சென்னியிற் கங்கை சேருஞ் சிவன்றனை நிந்தை செய்து
முன்னுபா தகஞ்செய் மூடன் விசுக்கிர னென்னுந் தீயோன்
றுன்னரு மழியா நிந்தத் தொல்கதி சேர்ந்த வாறும். (கo)

சித்தியுந் திருவு நல்கிச் சிவனெனும் வடிவு மாக்கிப்
பத்தியு மளித்துத் தூய பரகதி தருவ தாகி
யத்தனுக் குவந்த தான வானந்த வாவி யாதி
யுத்தம தீர்த்தந் தோன்று முயர்ந்ததோர் செய்தி தானும். (கக)

வேறு.

அத்தலத்தின் மகிமையாமென் றறிந்தருதன் றிருக்குத்தாதைக்கான்
சித்தமகிழ் கதைத்தொகையைச் செப்புகிநீ விரிவினென்ன
வித்தகனுஞ் சூதமுனி விளம்பினா னதனையானு
முத்தமமாந் தமிழினாலே யுரைக்கலுற்றேன் மொழிபெயர்த்தே. ()

பதிகமுற்றிற்று

ஆக செய்யுள். கஉ.

# தல விசேடப் படலம்

கற்பனை கடந்து நின்ற கடவுளே பரனே போற்றி
தற்பரப் பொருளே வானோர் தானுவே திருநெல் வாயிற்
பொற்புறு பதியை யாண்ட புண்ணியா போற்றி போற்றி
சிற்பரை யிடத்து மேவுஞ் சிவபெரு மானே போற்றி. (௧)

திருவளர் கமல மேவுஞ் செல்வியை மார்பிற் கொண்ட
கருவளர் முகில்போல் மேனிக் கண்ணனோர் காலந் தன்னிற்
றருவளர் கயிலை யென்னுந் தடங்கிரி யிடத்திற் சென்று
பெருமைகொ ளீசன் வைகும் பெருந்தளி வாயில் சார்ந்தான். (௨)

தளியினுட் சமயம் பார்த்துச் சார்ந்தனன் சுரரே சித்த
ரளியுறு மன்ப ரானோ ரகன்றிலர் வணங்கி யேத்துங்
கிளிமொழி யுமையோர் பாகங் கெழுமிய சிவனை யன்பிற்
குளிதரு மனத்த னாகிக் குரைகழல் வணங்கி னானே. (௩)

வணங்கிய கமலக் கண்ணன் வரதனை நோக்கி யையா
குணங்குறி கடந்த நாத குவலயம் யாவும் பெற்ற
வணங்கினை யொருபாற் கொண்டோ யைந்தொழின் முதல்வ பூவின்
மணமென வெங்கு மாகி மன்னிய கருணைத் தேவே. (௪)

பூவுல கதனின் மேலாய்ப் புண்ணியம் பயப்ப தாகி
யேவர்க்கு மரிய தாகி யெவ்வகைச் சித்தி தானு
மேவினர்க் களிக்கு மேன்மை மேவிய தலத்தை யெங்க
ளாவியி னாவி யாகி யமர்ந்திடு தேவ தேவ. (௫)

சினமுத லகற்றி வாழுந் தெய்வவான் முனிவர் யாருங்
கனைகழ லடியைப் போற்றக் கண்ணருள் வழங்குங் கோவே
மனவிரு ணீங்கி யுய்ய வாய்மலர்ந் தருளல் வேண்டு
மனகனே யுன்னை யல்லா லடியனேன் புகலைக் காணேன். (௬)

என்றன்பின் வழிபட் டேத்து மேந்தலுக் கிறைவன் கூறுங்
குன்றினைக் குடையாக் கொண்டு கோக்குல மதனை முன்னா

ணன் றுகாத் தருளு நாத நன்மையை யளிப்ப தான்
வொன் றினை யுலகந் தேறி யுய்த்திடக் கேட்டால் நீயே (எ)

பாற்கடற் பள்ளி கொள்வோய் பகர்ந்தில மிதன்முன் யார்க்கு
மேற்றிக ழூனைய தொன்றின் மேன்மையை யின்று கேட்பாய்
கூற்றினைக் காய்ந்த தென்று கூறுசீர்க் காசி காஞ்சி
போற்றிசெய் திருவெண் காடு பொன்மதிற் றில்லை மூதூர். (அ)

வரந்தரு திருநெல் வேலி மதுரையே மறைசை யாரூர்
பரந்தசீர்த் திருவை யாறு பார்மிசைத் தந்தை சொல்லை
நிரந்தரங் காத்த வேந்த னிலைகண்ட விராம நாத
புரந்தையில் குடந்தை காழி யம்பிகை தொழுமா யூரம். (கூ)

இத்தகு தலங்க ளெல்லா மெம்மருள் விளங்கு கின்ற
வுத்தம தலங்க ளாமென் றுணர்ந்திடற் பாலை யின்னும்
பத்திசெய் மாந்த ருக்குப் பரபதம் வழங்கு மேன்மைச்
சத்தியத் தலங்க டம்மைச் சாற்றுதுங் கேட்பாய் மன்னே (கo)

தலங்களிற் சிறப்பு வாய்ந்த தகாபுண் டரீக வீடா
யிலங்குறு ஞான மன்ற மியல்பெறு விருத்த சைலந்
துலங்குசீர்க் கலசப் போர்கொ டொன்னகர் திருநெல் வாயில்
விலங்கொடு பறவை தேடும் விலங்கலுஞ் சிறந்த வாகும். (கக)

முனிவரன் கபில னென்பான் முன்னைநாட் பூசை செய்து
துனியகல் பதியு மாகுந் தூயபா சுபத முன்னுட்
பனிமதி மிலைந்த வேணிப் பகவன்பாற் பார்த்த னென்பான்
கனிவுடன் பூசை செய்த கடிமதி னகரு மாகும். (கஉ)

கார்நுறு சோலை சூழ்ந்த கடிமதிற் றிருநெல் வாயிற்
பேருறு பதிதான் முத்திப் பெருந் திருவளிப் பதாகு
மேருறு மாங்கே யாமு மென்றுமே நிலவி வாழ்வோம்
பாருறு பதிக டம்பிற் பிரியமாம் பதியு மாகும். (கங)

மாதவ வின்னுங் கேட்பாய் மாநிலத் திதுபோல் வேறொன்
றோதிடத் தக்க தில்லை யுமையொடு மொருகோட் டானை

வேறு

ஆவயிற் பிரம தேவ னாயிழை வாணி யோடு
மேவினன் படைக்கும் வன்மை மெலிவின்றிக் கூடும் வண்ண
மேவரும் வியப்ப நம்மை யிணையிலாப் பூசை செய்வான்
றுவிலாப் பொற்பூக்கொண்டு தகைபெறப் புரிந்தான் மன்றே. (

சங்கரா போற்றி கங்கைச் சடையனே போற்றி போற்றி
பொங்கரா வணிந்த புத்தேள் போற்றியெம் புனிதா போற்றி
யெங்குமாய் நிறைந்தாய் போற்றி யேந்திழை சுவண வல்லி
பங்கனே திருநெல்வாயிற் பரமனே போற்றி போற்றி. (உக

ஆரண மறைக்கு மெட்டா வாதியே யகில நாதா
காரணப் பொருளே யெல்லாப் புவனமும் படைக்குங் கோவே
நாரணன் முதலாந் தேவர் நாடுதற் கரிய நின்னை
யோரணக் கமலப் பூவா லியற்றுவே னெழில்கொள் பூசை. (

சிறியதோ ரிடையா ளோடுஞ் சிறுமகா ரிருவ ரோடு
நெறிவரு மிடபத் தோடு நேர்மைகொ ணந்தி யோடும்
பிறிவரு கணங்க ளோடும் பெருமநீ விளங்கி யிங்கே
யுறைகென வரந்தான் கேட்ப வோமென விசைந்தோம் யாமே.

ஆதலின் மேன்மை வாய்ந்த வணிநக ரதனி லென்றுங்
கோதறு பொலம்பூக் கொண்டு குணமலை நின்ற மேலோ
ரேதமில் பூசை செய்தே யிறைவனை வணங்கிப் போற்றப்
பேதமில் கனகவல்லிப் பிராட்டியோ டினிதி ருப்போம். (

அந்தமா தலத்தின் மேன்மை யறிந்தெவர் வாசஞ் செய்வார்
பந்தமி லன்னோர் தாமும் பரசிவ லோகஞ் சேர்வார்
சிந்தையில் விசாரஞ் செய்யேல் செப்புவ தொன்று மில்லை
யிந்திரை மணாள னின்னு மியம்புதுங் கேட்பா யன்றே. (

பன்னுதண் சோலை சூழ்ந்த பழம்பதி திருநெல் வாயின்
மன்னிய விலிங்கந் தன்னில் வருமுறை யுகங்க ளென்றுந்
துன்னிய விளக்க மாகித் தொழுபவர் தமக்கெப் போது
முன்னிய பொருள்க ளெல்லா மொய்யென வளிப்போம் யாமே.

வேறுள தலங்க டம்பில் விருப்ப முண் டெமக்கோர் காலத்
தேறுசீர்த் தகாரகாய மியம்பிய திருநெல் வாயின்
மாறிலா திருக்கு 'பிந்த மாதல மீரண்டின் மேனி
கூறுகொ ளுமையா ளோடு குலவிநா மிருப்போ மென்றும். (கரு)

படிபுகழ் திருநெல் வாயிற் பதிதனின் மறைத ரேன்றல்
இடையவே இடையா தென்றும் இளத்திளைஞ் சுருக்க மாக
வடையவும் கூற லாமோ வாவயி னம்மை நீயு
மடியினைப் பூசை செய்தே யசுரரை வெல்வாய் மன்றே. (கசு)

என்னவே யுலக நாத னியம்பினன் விண்டு வுக்கு
நன்னுதற் றேவி யோடு நந்தன வனத்துட் சென்றான்
துன்னிய டகையைத் தீர்க்குந் தொழிலினை மனத்துட் கொண்டு
பன்னகப் பாயலானும் பகர்ந்தவை குண்டஞ் சென்றான். (கஎ)

பங்கய மலரை வாட்டிப் பசுங்கதிர் நெல்லைத் தின்று
செங்கயல் பாய மோதி சிந்திய திம்பா றெங்கும்
துங்கநீர்ப் பழன வேலி சூழ்தல மகிமை சொன்னோம்
இங்கினி யிதனைச் சார்ந்த வெல்லையை யிசைப்பா மன்றே. (கஅ)

தலவிசேடப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் க00

---

# சிவபுரத்தின் எல்லை கூறிய படலம்

---

சீர்வளர் தில்லை காஞ்சி திருக்கயி லாயங் காசி
யேர்வளர் கமலை யின்னு மிவைதலம் பலவின் மேலாங்
கார்வளர் திருநெல் வாயிற் கண்ணுதற் பாதனை யெங்கள்
பேர்வளர் சுவண வல்லி பங்கனைப் பேணி வாழ்வாம். (க)

ஓங்கிய புகழி னாலே யுயர்சிவ புரந்தான் யாங்குட்
பாங்குட னுளது முன்றூட் படைத்தவர் யாவர் சொல்லோ
தேங்கிய கருணை வாரிச் சிவன்றனைப் பூசித் தோர்யார்
நீங்கிலன் பிரமன் றானு நீண்டதோர் தவமேன் செய்தான். (௨)

அன்னவ னடைந்த சித்தி யறைகுதி யின்ன தென்று
பன்னரூந் தலத்தின் மாண்பும் பகருதி காசி யாதி
சொன்னவத் தலங்க டம்முட் தோன்றலே யிதற்கு வாய்ந்த
நன்னல மெதனா லுண்டா நாடிய வகல நீளம். (௩

நாசமில் மகிமை யின்ன நவிலுதி யிரிஷினாலே
காசகனின்பாற் கேட்குங் கருத்தினை யுடையோர் மின்னே
பேசவில் முனிவ நீயே யியம்புதி யென்று வேண்டப்
பேசுவன் வியாசன் பாங்கர்ப் புராணங்கள் பெரிதுங் கேட்டோன்

புண்ணிய நதியாப் போற்றும் பொன்னியின் வடபான் மன்னுந்
திண்ணிய தீர்த்த மான தென்டிரைக் கடலின் மேற்காந்
தண்ணிய விருத்த கங்கைத் தெற்கினிற் சாருங் கண்டோர்
கண்ணுமித் திரகி லத்தின் கிழக்கினிற் கவினு மன்றே. ((

அற்புத விருத்த மாம்கன்பதி யதற்குத் தென்கீழ்ப்
பொர்புறு திசையின் கண்ணே பொலிவுறும் பதியு மாகுந்
சிற்பரை முதல்வி யாகுஞ் செயமுறு காளி கோட்டத்
தெற்பொலி திசையீ சானத் தெழிலுறு பதியாய் மன்னும். (சு

இங்கிவை யாவுஞ் சூழ்ந்தே யிலக்குற நடுவ னாகிப்
பொங்கிய மேன்மை வாய்ந்து போக்கரும் பாவம் போக்கிச்
சங்கரற் குவந்த தாகிச் சதுர்மறை புகழ்வ தாகி
யெங்கணுஞ் சோதி யாகி யெவற்றினு மேலாய் மன்னும். (எ

பாதக மனுக வொன்றுப் பான்மையு முடைய தாகு
மேதகு கன்னி கார மென்மலர்க் காக மூண்ட
பாதவி மாவஞ் சாதி மாலதி வகுளமே நாகம்
பூதவ மதுகங் காந்தள் பாடலம் பொலியு மெங்கும். (அ

தும்பையே பழமுன் பாலை துளைதரு தாழை தென்னை
சம்பகம் விளாவே நெல்லி தாதகி சிந்து வாரம்
பம்பிய கமுகே யட்டி பாதிரி திமிசே தோன்றி
யும்பரும் வியப்ப வெங்கு மோங்கியே விளங்கா நிற்கும். (௯)

பண்புற வண்டுந் தேனும் பாடுறு கமலம் பூத்துத்
திண்டிறற் கரையின் மீது திரையெறி வாவி யோடை
கண்டகண் கவருங் கூபங் காமரு தடாக மின்ன
விண்டலம் வியப்ப வெங்கும் விளங்குவ வங்கண் மாதோ. (௧0)

இருவினை யொருங்கு மாய்த்த விருந்தவ முனிவர் வாழு
மருவிய பன்ன சாலை மன்னியே விளங்கு மோர்பால்
கருமுகில் படைக்கும் வேள்விக் கனல்விடு புகையு மோர்பால்
கரியினை முழக்கு மோர்பாற் கவினுமப் பதியின் கண்ணே. (௧௧)

மல்லனீர் ஞாலந் தன்னுள் வளர்புகழ் முழுதுங் கொண்ட
தில்லையம் பதியின் சீருஞ் செப்புதற் கியன்ற தாமோ
வல்லியங் குமுறு மோதை வாரணம் பிளிறு மார்வ
மெல்லையில் சிங்க நாத மெண்டிசை போர்க்கு மாங்கே. (௧௨)

மானமார் கவரி மானு மரையொடு கலைமா னுமா
வேனமே புல்வாய் பெற்ற மென்பண திரியு மெங்கும்
வானவர் வந்து நாளும் வணங்கினர் செல்லப் பொல்லாத்
தானவ ரஞ்சுந் தில்லைத் தலத்தினோர் பால தங்கும். (௧௩)

என்னுறு கிரக மற்று மிடாகினி வேதா ளங்கள்
கண்ணெனச் சூழ்ந்து காக்குங் காவலும் பெற்ற தாலும்
கண்ணுத லேவ லாலே க்ஷேத்திர பாலன் காக்குந்
திண்மையு முடைய தாகுஞ் சிவபுர நகர மென்பர். (௧௪)

பாவமே வடிவ மான பிராணிசெய் பாவப் பொம்மல்
போவது மன்றி யெல்லாப் புண்ணியஞ் சேர்த லுண்மை
யாவதா மழுக்கா றூர்வம் வெகுளியு மனுகா தாங்கே
சாவதன் பயமு மில்லை சார்ந்தவன் வசிப்பா ருக்கே. (௧௫)

உலகினிற் றலங்க ளுள்ளே யுத்தம தலமா மென்று
மிலகிய சித்தி யெல்லா மெய்திட வளிப்ப தென்று
மலகிலா முத்தித் தான மவிமுத்த மாதி யென்று
மிலகுவா யளிக்குஞ் சித்தி யென்றுமா கமங்கள் கூறும். (௧௫)

விராட்டெனும் புருட னுக்கு விமலமா மிதய மென்று
பராவுவர் முனிவர் நாளும் பண்புடன் பூசை செய்வா
ரராவணி சிவனு லேயே யாக்கிய திதுவே யல்லால்
விராவுறு காசி வானோர் விழைமுது குன்று மன்றே. (௧௬)

பகர்திரி கோடி காவும் பரமுத்தித் தான மாக
வகிர்மதிச் சடையன் முன்னாள் வகுத்தனன் பத்தி யோடு
மகிவரர் கேண்மி னன்கு மலரயன் வகுத்தா னல்லன்
றுதுசிவன் வியாபி யேனுஞ் சார்ந்திடும் பொருளுக் கேற்ப. (௧௭

ஆடியிற் போல மேலாம் பொருள்களி லவிர்ந்து தோன்றும்
பீடிய லருளே யன்னான் பிரீதியை முத்தி வாழ்வை
நாடினோர் சிவபு ரேச னகரினை யடைந்தா ராகி
வீடலில் பத்தி யோடு வசித்திடல் வேண்டு மாங்கே. [௧௮

சனற்குவன் வாம தேவன் சுவுதமன் பாத்து வாசன்
றன்னாளி வசிட்ட னாமன் சமதக்கி சடால கன்னே
புண்ணியப் புலக னட்டா வக்கிரன் பொதியிற் வாழ்க்கை
நண்ணிய முனிவ னோடு நாரதன் காசி யன்றான். [௨௦

ஆணிமான் டவியன் மரசன் பராசர னுபுனா பனே
சேனுலா முனிவர் பல்லோர் தேர்ந்தவர் மறையோ யங்கந்
தானுவை முக்கண் ணனைச் சம்புவைத் தேவ தேவை
மானுறு சதருத் ரிய மந்திர முருத்ர ருக்கம் [௨

பழமறை புகலும் பஞ்சப் பிரமமே புருட சூக்தம்
கெழுமிய வுருத்ர மாகுங் கண்ணுறை மணியே யாதி
விழுமிய மனுவாம் பஞ்சாக் கரத்தொடு விமல மான
வழுவிலா மனுக்கள் கூறி மஞ்சன மாட்டி னைத்தார். [௨௨

பிறவியாஞ் சடலை நீந்தப் பிடியல் புணையாய் மன்று
மறிவரு திருநெல் வாயி லமர்தரு மிடத்தைச் சொன்னோம்
நறவுகொ ளிதழி வேணி நாதனை வணங்கி வேதன்
றிறமுறு சிருட்டி வன்மை சிறப்புடன் பெறுதல் சொல்வாம் (௩௦)

சிவபுரத்தின் எல்லை கூறிய படல முற்றிற்று.
ஆ செய்யுள் கஙo

---

# பிரமன் சிருட்டி வலிமை பெறுபடலம்

---

சோதியே சுடரே போற்றி சிவபுரத் தோன்றல் போற்றி
வேதனுக் கிடும்பை தீர்த்து வெள்ளைமெய் யானை யிந்தாய்
மாதவம் பூசை செய்ப வலிமையு மளித்தா யெங்கள்
பாதகந் தீர்ப்பாய் போற்றி பரமனே போற்றி போற்றி (க)

மறைகளை யோதி வல்லீர் மண்பெறுந் தந்தை யென்பான்
நிறைதரு வலிமை பெற்றோ னீண்டமா தவமேன் செய்தான்
அறைதரு குறையென் னென்று லதனையாம் விரித்தெ டுத்து
முறைமையிற் கூற லுற்றோ முனிவரே யன்பிற் கேண்மின் (உ)

முன்னொரு காலந் தன்னின் முதுமறை கற்று வல்லோன்
பன்னெடு முலகங் காக்கும் பகவனும் பிரம னென்பான்
றன்னதாஞ் சிருட்டித் தன்மை தாங்கின னிவைக ளெல்லா
முன்னையி னுண்டா கென்று முன்னினன் மனத்தின் மாதோ. ()

நினைந்திடு கின்ற காலை நீடிய வுலக மெல்லாம்
வனைந்திட வரிய தாகி வருந்துறை வாரா தாக
வினைந்தனன் முகமும் வாடி யேங்கின னென்று நின்றான்
றனைந்தலை யுலக மாக்கு நாயகத் தன்மை யில்லேன் (௪)

பன்னெடும் பிறவி தோறும் பண்புட னரிதிற் செய்து
பன்னுதற் கரிய பான்மைப் புண்ணியப் பயனு லன்றி
மன்னிய தவத்தி னானு மற்றைய வகையி னானு
மின்னதாஞ் சிருட்டித் தன்மை யெய்தின னிதுதான் மன்னோ ()

தேவரா லசுரர் தம்மாற் சேர்ந்திடு தன்மைத் தாமே
மேவருந் தடைய வொன்று மிறையவ னின்ப ஞானத்
தாவிலா வடிவங் கொண்ட சங்கர னருளி னாலே
மேவிய படைப்பி னாற்றல் மெலிந்திடப் பெற்றே னந்தோ. (௬)

செய்திட முயன்றேற் கந்தோ சித்தியே வாய்க்க வில்லை
மெய்திகழ் படைப்பு வன்மை மேவிடா தொழிந்த தன்றே
நொய்தினிற் றடுக்கல் செய்து தொன்மையை யடைந்தோர் யாவர்
உய்தியு முளதோ யானே யாதினி யுள்ளே னென்பான். (௭)

துண்டமா மதியஞ் சூடுந் திருமுடி துலங்கித் தோன்ற
விண்டலர் கமலம் போல விளங்குமா முகமுங் கண்ணு
மெண்டகு தோள்க ணான்கு மிலங்குறப் படிக மேனி
கொண்டவோர் மானைக் கண்டான் குலவுநீ யாரை யென்றான். ()

மண்பதை யுலக மாக்கு மலரவ னன்று கேட்ப
வின்பமே வடிவ மான வீசனே படைத்தா னென்னை
யென்பெயர் வாணி வாக்குக் கிறைவியு நானே யாவேன்
சின்மய மாக வென்னைச் சிவபிரான் படைத்த னன்றே. (௯)

சாற்றினன் றொழிலும் பேருஞ் சத்தியே யயனுக் குன்னை
யேற்றவன் சத்தி மாறு மீண்டொரு சோதி காண்பாய்
தோற்றமச் சோதி தன்னிற் றாயகஞ் சத்தி யோடு
தேற்றமா யென்று முள்ளோன் றெரிவை நீயுணர்ந்து கொள்வாய். ()

அன்னதோர் சோதி தன்னி லாயிழை பிரம னோடு
மன்னிய வம்மை வந்து வண்முறை பூசை செய்வாய்
யென்னவே யருளு மீச னவ்வயின் வந்தன் யானு
மன்னதாற் சத்தி யானே னருவன் சத்தி நானே. (௧௧)

வெருவலீ பிரம யாங்கள் வானமர் பிழம்பாஞ் சோதி
மருவிய விடத்திற் போகி மாதுமை பாகன் றன்னைப்
பொருவரும் பூசை செய்வோம் பொள்ளெனக் கவலை தன்னை
யொருவுதி பெருமை யென்றா ளொள்ளிய வெள்ளை மெய்யாள். (௧௨)

வேறு

வரியளி மருதம் பாட வனசமா மலரின் கண்ணே
திரிதரு தரங்க மீது திகழ்படி நெருக்க மாகித்
தெரிதரு மணிநீர் தேங்குந் தீர்த்தத்தை யருளா னந்தஞ்
சொரிதரு மலைய சைக்குந் தூயதோர் மனத்தன் றானும். (உ0)

அற்புத மெய்தி யந்த வணியிழை மடந்தை யோடு
பொற்புறு தீர்த்த மூழ்கிப் புனிதனைக் கணங்கள் காக்குஞ்
சிற்பர வியோம மான சிவபுர நகரைச் சார்ந்து
விற்பொலி வேத்தி ரத்தோன் றிருநந்தி விடுப்ப வேகி. (உக)

கண்டில னுமையை வேளைக் கணபதி தன்னைச் சோதி
மண்டலப் பொருளைக் கண்டான் மல்லமர்க் கணங்க டம்மை
யெண்டருங் காவல் செய்வோ ரிவ்விடை யொன்றுங் காணே
னுண்டெனிற் சூனி யந்தா னுளதன்றி வேறு காணேன். (உஉ)

சூனிய விடத்தின் கண்ணே சூழ்ந்துநீர் நிற்ப தென்னே
மானியல் காத்தோ னங்கு மன்னின னென்பி ராயி
னேனவன் காண கில்லா னிசைமினோ வென்று கேட்ப
வூனமில் கணங்க டாமு முரைத்தன ரிந்த மாற்றம். (உங)

தீயவை புரிவோர் தாமுந் திகழுறு மேனி காணார்
மேயநின் றொப்பார் யாரு மிருகவன் றன்னைக் காணார்
சேயனு மவருக் கன்னான் செயலினை யெவர் சொல்வார்
தூயவ ரருட்கண் கொண்டு தோன்றிடச் சிறிது காண்பார். (உச)

சுத்தமாய்த் தொன்மை வாய்ந்த சுருதியின் சிரத்தி னாலு
மத்தகு சிவனுங் காண்டற் கரியனென் றுணர்ந்து கொள்வாய்
தத்துவங் கடந்து நின்ற சங்கரன் கண்டந் தன்னிற்
பத்தியிற் கபால மாலை பரந்தமை யுணர்வாய் மன்னே. (உரு)

மாரனைப் புரங்கண் மூன்றை மற்றுள வீரர் தம்மைப்
பாரணஞ் செய்த வீரன் பருப்பத மங்கை காந்தன்
நாரணன் பிரமன் காணா நாட்டமூன் றுடையான் றன்னைக்
காரண முதலை யாவர் கண்டிட வல்லோ ரம்மா. (உசு)

பத்தியர் லடையும் பான்மை படைத்தவன் பரமன் சம்பு
மெத்திய கருணை வாரி மேவிய மோகத் தாலே
யெத்துக்கு நமக்கு முன்ன ரேங்கினை பிதற்று கின்றாய்
சத்தியப் பொருளை ஞானத் தனிமுதற் சிவனை மன்றே. (உஎ)

அதிதரு விருப்ப முண்டே லாயிழை மடவா ரோடு
நெறிமுறை பத்தி தன்னு னெடுந்தவஞ் செய்தி யென்று
குறைதவிர் கணங்க ணந்தி குரவனை முன்னுக் கொண்டோர்
மறைதரு மொழியைக் கேட்டே யருந்தவஞ் செய்ய வெண்ணி. ()

மோகம தகல வேதன் மொய்த்திடு கருணை யோங்கு
சாகர தீர்த்தந் தன்னிற் சலமதில் மனத்த னாகி
யாகமே வாக்கா யுள்ள வணங்குடன் விதியிற் றோய்ந்தே
யோகைய னாகி மேலா முறுகட னியதி முற்றி. (உசூ)

இதயதா மரையி னப்ப னியைந்தற் பொருட்டின் கண்ணே
யிதமுட னிருப்பா னென்கா யெழினுறு புயத்த னாகி
மதியமர் சடைய னீல மாண்பெருங் கண்டன் கங்கை
நதிபணி முடிய னாகி நலந்திகழ் சோதி யாகி. (௩௰)

திருந்திழை யொருபாற் கொண்டு சிவபுரத் தமர்ந்த தேவை
முருந்தொடு நிகர்க்கு மூரன் மாதொடு தியானஞ் செய்தே
யிருந்தன னளப்பில் கால மிருந்திடு மன்னுன் சித்தந்
திருந்திய கூதிர் தன்னிற் சேறிலாக் குளநீர் போலும். (௩க)

பழுதிலா மனத்தின் றூய பக்குவ மதனைச் சோதித்
தழிவிலா காய நாப்ப ணண்மிய தேவ தேவன்
றொழுதிடு பிரமன் முன்னர்த் தோன்றினன் சிவபு ரேசன்
முழுதருள் புரிய நின்ற முடிவிலா முக்கண் மூர்த்தி. (௩உ)

அத்தகு ஞான்று தன்னி லம்பரத் திடையே பேரி
மெத்திய படக மாதி முழங்குறு மொலியைக் கேட்டான்
பத்திதனுந் திசையுஞ் சென்று பரவிய முழக்கா லன்று
வைத்தம் யோக நீக்கி யொருலகை கண்ணுற் கண்டான். (௩௩)

விண்ணிடைப் பரிதி கோடி விளங்குவ தென்னச் சோதி
நண்ணிய திருநெல் வாயி லுறைதனை மதியின் பாதிக்
கண்ணிசேர் சடையான் றன்னைக் கனகமா வல்லி யென்னும்[டான்
பெண்ணினை யொருபாற் கொண்ட பிரான்றனை விடைமேற் கண்

கண்டவப் பொழு தெழுந்து கைகளுந் தலைமே லேற
விண்டெழு காதல் பொங்க விழிகளுங் களிப்பின் மூழ்கக்
கொண்டெழு முள்ளந் தூண்டக் கோற்றொடி வாணி யோடு
தண்டம்போல் வீழ்ந்து வீழ்ந்து தரையிசைப் பணிந்தா னன்றே

மழுவொடு மானு மேந்தி வரதமோ டபயந் தாங்கிக்
கெழுமிய கரங்க ணான்குங் கேழ்கிளர் தோள்க ணான்கு
முழுமையி னுரிமை சூழ்ந்த வொளிர் திருவரையுஞ் சேந்து
விழுமிய கமல பாத விளக்கமுங் கண்ணிற் கண்டான். (௩௬)

வண்டமர் குழலும் வாணுர் முழுமதி முகமு நீண்டு
விண்டெழு கருணை மல்கு விழிகளுங் களபக் கொங்கை
கொண்டெழு மிடையின் சீருங் கோற்றொடிக் கனக வல்லி
யெண்டரு செய்ய பாதமி ரண்டுமப் பிரமன் கண்டான். (௩௭)

அளவிலாப் பிறவி யென்னு மாழியின் முழுகி நாளு
மளவிலாத் துயரால் வாடு மளவிலா வுயிர்க்குந் தாயா
யளவிலா வித்தை ஞான மளித்திடுஞ் சுவண வல்லி
யளவிலாக் கருணை மேனி யருளினால் வேதன் கண்டான். [௩௮]

தந்திமா முகனைச் செவ்வேற் சரவண பவனைக் கண்டு
சிந்தையின் மகிழ்ச்சி பொங்கச் செய்தவம் பலித்த தென்று
மிந்தவெண் கண்ணும் பெற்ற திறற்கன்றோ வென்றும் பல்கால்
வந்தனை புரிந்து வாயில் வந்தன போற்றி னானே. (௩௯)

இலங்குசீர்த் திருநெல் வாயி லிறைவனே போற்றி போற்றி
கலங்கிய தொண்ட னேனைக் காத்தருள் செய்வாய் போற்றி
பொலங்கொளுஞ் சடையாய் போற்றி புண்ணிய வடிவே போற்றி
நலங்கொளார் காண வில்லா நாதனே போற்றி போற்றி. (௪௦)

என்றவ னேத்துங் காலை யெருக்கி னொடிதழ்க ணாறுங்
கொன்றையு மதியும் பாம்புங் குலவிய சடையோன் சொல்வான்
இன்றுநீ நம்மை நோக்கி யியற்றிய பூசை கண்டு
நன்றுநா மகிழ்ச்சி கொண்டோ நான்மறை பயின்ற வேத. (சக

வேண்டிய வரந்தா னென்ன விளம்புதி யென்று கேட்ப
மீண்டுமம் மலரோன் வீழ்ந்து பன்முறை வணங்கிப் போற்றி
யாண்டவா படைக்கு மாற்ற லளித்திடல் வேண்டு மன்றி
நீண்டதோர் கருணை யாலே நீபிர சன்ன மானாய். (சஉ

என்பது நிசமே யாயி னெறிதிரைப் பிறவி வேலைத்
துன்பம தகற்றுந் தொல்லோய் தொழுதுனைப் பூசை செய்யப்
பொன்னியல் வல்லி யோடு பொருந்திநீ யிங்கு வைகி
யின்புட னெந்த நாளு மிருந்தருள் புரிக வென்றான். (சங)

பிரமனுக் கிரங்கிப் பெம்மான் சிருட்டிசெய் பேற்றை யீந்து
பிரியநா யகிதன் னோடு பிரசன்ன மாகிக் காட்சி
பெரிதுவந் தளித்த வாறே பெருந்தகை வடிவங் கொண்டு
பரவுறு திருநெல் வாயிற் பதிதனில வீற்றி ருந்தான். (ச

நாயக னருளி னாலே நான்முகன் படைக்கு மாற்றன்
மேயின னாகி யாவும் விழுமிதிற் படைத்து மிக்க
நேயங்கொண் மனத்த னாகி நிமலனைப் பொலப்பூக் கொண்டு
தூயதோர் பூசை செய்து துயரெலாந் தொலையப் பெற்றான். (ச

மாதிரம் புகழு மாங்கண் மங்கள சொரூபி யாகிச்
சோதியாய்ச் சுடரு மானோன் றோன்றுசா நித்ய மாகி
யாதியம் பகவ னானோ னருளினா லுலகுக் கின்னல்
வாதியா வண்ணஞ் செய்யு முருத்திரன் வானோர் நாதன். (ச

பத்தியா லறியும் பான்மை படைத்தவன் பரம னென்பான்
வித்தைகள் யாவுங் கற்றீர் விரிவின்றி யிதனைச் சொன்னோம்
நித்தனா ரருளி னாலே நீடிய தடைக ணீக்கி
யத்தனை நினைந்து நாளு மன்பினாற் பூசை செய்மின். (ச

பன்னுமிப் படலங் கேட்போர் பக்தியாற் கேட்பிப் போரு
நன்னிய மத்த ராகி நாடொறு நவில்வோர் தாமுந்
துன்னருங் கதியிற் சேர்வர் தொடருமிப் பிறப்பி லோர்கா
லென்னினு மிதனை யன்பா லியம்புத லன்று மன்றே. (சஅ)

காவணம் பொய்கை பைம்பூங் காவனஞ் செழித்து மல்குந்
தேவிய திருநெல் வாயிற் சிவன்றனை வழிபட் டேத்திப்
பூவியல் பிரம னாற்றல் பெற்றமை புகன்றோ மிந்த
மூவுல கேத்துந் தீர்த்த மேன்மையை யினிமேற் சொல்வாம் (சகூ)

பிரமன் சிருட்டி வலிமை பெறுபடல முற்றிற்று.
ஆ. செய்யுள் கஎகூ

# கிருபா சாகர தீர்த்தப்படலம்

சீர்பூத்த மூவிழிமுளையு முக்குரியச் செம்பட்டு
மலர்ச்செய் வாயுங்
கார்பூத்த கரிதுமுலு மிடப்பாகந் திருமேனி
கலந்து தோன்ற
போர்பூத்த நதியரவு பிறைமுடிமேல் வலப்பாகம்
பிறங்கித் தோன்றும்
பார்பூத்த சிவபுரத்துப் பெருமானைப் பதமலர்க
ளிறைஞ்சி வாழ்வாம். (க)

வேறு

புண்ணிய வடிவ மாகிப் புகன்றிடு பாவம் போக்குந்
தண்ணிய கிருபா சிந்துத் தீர்த்தந்தோய் மாந்த ருக்கே
யெண்ணிய பொருள்க ளுண்டா மின்பமு மிகவே யுண்டாம்
விண்ணவர்க் கரிய ஞான விழுப்பொரு ளுண்டா மன்றே. (உ)

கருந்தடங் கண்ணுஞ் செய்ய கமலமா முகமுங் கொண்ட
வருந்ததி மாதித் தீர்த்த மாடியே தூய ளாகு
ளருந்திரு வசிக்கு மிக்கீ ராசம னஞ்செய் தன்றோ
பெருந்திரு வித்தைக் கெல்லா நாயகன் பீட மானான் (ங)

மாதவர் செம்ம லான வசிட்டமா முனிவன் மூழ்கி
மாதுய ரளித்த மக்கட் சோகமாம் வாரி நீந்தி
யேதமில் கரையி லேறி யின்பத்தை யடைந்தா னந்தப்
பாதக மகற்றுந் தீர்த்தப் பெருமையைப் பகரக் கேட்டோர். (ச)

சினமுழுப் படையைக் கொண்ட சிவன்பத மடைதல் செய்வார்
முனமொரு காலந் தன்னின் மொய்வலி கொண்டா ராகி
யனமென நடையைக் கொண்ட வாயிழை திதியின் மைந்தர்
மனமுடன் றீமை செய்வார் முப்புர வடிவங் கொண்டோர். (ரு)

எண்ணிய வெண்ணி யாங்கே யியலுறு வடிவங் கொள்வார்
திண்ணியர் வலிமை யுள்ளார் செப்புதற் குவமை யில்லார்
வண்ணப்பொன் வடிவங் கொண்ட மாபுர மேனி கொண்டார்
கண்ணிய கருட்பொன் மேனி கொண்டவர் பலரா மன்றே. (சு

பாற்கடற் பள்ளி யானும் பதுமமே லுறைவோன் றானு
மேற்றிகழ் தேவர் தாமும் வெல்லுதற் கரிய சீரார்
நாற்கடற் புடவி யுள்ள நரரொடு மசுரர் வானோர்
பாறபடு முலக மெல்லாம் பதைத்தன விவர்க டம்பால். (எ

டாங்குறு முலக மூன்றும் பட்டண வடிவங் கொண்டே
யேங்குற வருத்து நீர்மை யியைந்தவர் மூவ ராலுந்
தீங்குறக் கொளுத்தப் பட்ட திசையெங்கும் பதுங்கி யோடித்
தாங்கருந் துன்ப முற்றார் தருசுரர் பிறரு மம்மா. (அ

கந்தமா மலரின் மேய கடவுளுங் கண்ணன் றானு
மிந்திரன் முதலாந் தேவ ரேவரு மன்னோர் தம்மைச்
சிந்திடு மாற்ற லோரிற் செவ்வனே யில்லா ராகி
மந்திர மிருக்க வெண்ணி வானிடைப் பொருங்கு தொக்கார். (கூ

தொக்கவர் மேரு வின்பாற் சுபகையென் குகையைக் கிட்டி
யக்கடு மசுரர் செய்யு மரந்தையை யுள்ளி நைந்தார்
மிக்கவர் நமக்கு யாங்கண் மேன்மைகொள் பதியு மாவோம்
றுக்கமே யடைந்தோ நாளுந் தொல்லைக்கோ ரெல்லை யில்லை. (க0)

இரக்கமி லசுரர் தம்மை யமனுக்கு விருந்தா செய்ய
வரத்தொடு வலிமை யில்லா மன்னிய வன்பர் தங்கள்
கருத்துறை பெருமான் றன்னைக் கழலிணை வணங்கி வாழ்த்திற்
புரத்தினை யழிக்கு மாறு புண்ணிய னருள்பா லிப்பான். (௧௮)

என்றனன் கண்ணன் கூறு மிந்திர னயனே தேவ
ரென்றவர் சூழ்ந்து போதச் சிவனுல கெய்தி யங்கட்
டுன்றிய கணங்கள் சூழ்ந்த தோன்றலை வணங்கிப் போற்றி
யன்றினர் புரங்கள் மூன்று மழித்திட முயலுந் தேவர். [௧௯]

சங்கரா போற்றி போற்றி தாணுவே போற்றி போற்றி
கங்கையைச் சடையில் வைத்த கடவுளே போற்றி போற்றி
சங்கமார் குழையாய் போற்றி சயசய போற்றி போற்றி
யெங்கணு நிறைந்தாய் போற்றி யாவையு முணர்ந்தாய் போற்றி ()

நித்திய ஞான மெய்ப சுகமவாக மங்கட் செட்டா
வுத்தம நடன நாத வுருத்திர போற்றி போற்றி
தைத்தியர்க் கிறுதி செய்வோய் சயசய போற்றி போற்றி
சித்தமீ திரங்கிக் காப்பாய் சிவபரம் பொருளே போற்றி. [௨௧]

என்றனர் துதித்து நிற்கு மிமையவர்க் கருளு மீசன்
குன்றலி லிமையோர் காணீர் கூறிய துதிக்கு வந்தோ
நன்றுநீர் பசுவா நாமே பதியென விருப்போ நும்மைக்
கன்றிய புரமூன் றையுங் காய்க்குவ மின்னே யென்றான். [௨௨]

இம்மொழி யிமையோர் கேட்டா ரிறைமுனம் பணிந்து சொல்வார்
செம்மையி லன்றோர் நூறு யோசனை தேவ மான
மெய்ம்மைசே ரளவை தன்னால் விசால மெய்யுடையோ ராவார்
வெம்மைசேர் வடிவந் தாங்கி வீரரை யழித்தல் வேண்டும். [௨௩]

ஐயநீ யசுரர் தம்மை யழித்திட வெண்ணுவா யேல்
மெய்ப தாமுறு வலாலு மேவிய நகத்தால் வாக்காற்
செய்பாற் பார்வை யாலுஞ் செற்றிட வலிமை யுள்ளா
யுய்வகை யவருக் கில்லை யுண்மையீ தாகு மன்றே. [௨௪]

ஆயினும் பொருதற் கேற்ற வரியதோர் கருவி வேண்டு
மேயதோர் பாண மாலவன் மேதினி யிரத மாகுஞ்
சேயதோர் மேருத் தாலுஞ் சிறந்திடு வரிவில் லாகும்
பாயதோர் பரிதி திங்கள் பரித்திடு முருளை யாகும். (௨௫)

வேதமே குதிரை யாக வேதனே பாக னாகப்
பேதமி றேவர் காலாட் பெரும்படை யாவா ரென்று
மாதவன் கூறக் கேட்டு வாதனு மதற்கி சைந்தே
யேதமி றேரி லேறி யேவரு மொருங்கு போத. (௨௬)

திரிபுர தகனஞ் செய்யச் சென்றிடும் போது தன்னிற்
கருமைகொள் கடலே போலத் துந்துபி கறங்கா நிற்ப
வெரியொரு கோடி யென்ன விலகிய சோதி கொண்டே
யரியயன் வானோர்க் கெட்டா வாதியுஞ் செல்ல லுற்றான். (௨௭)

விரிந்திடு மாயை கற்று வெறுப்பன பலவுஞ் செய்து
திரிந்திடு புரங்கண் மூன்றுஞ் சேர்ந்தொ ரிருக்கை சேர்ந்து
கரிந்திடக் கணைக டொண்டிக் கனற்கணைத் திறந்து பார்க்க
வெரிந்திடு சுவாலை தன்னால் யாவரும் வருந்த முற்றார். (௨௮)

புரங்களு நீறு பட்ட பொன்னகர் வேந்தன் வானோர்
கரங்களைக் கூப்பி நின்று கனலினைப் பொறுக்க கில்லோம்
வருந்தின மதனை யின்னே வதங்கின மென்று கூறி
யிருங்கழ லருச்சித் தேத்தி யிறைவனை வணங்கி நின்றார். (௨௯)

அன்னவர்க் கிரங்கி யெம்மா னாறிய சினத்த னாகி
மன்னிய கருணை கொள்ள வார்ந்தது கண்ணீர் தேவர்
துன்னினர் வெப்ப நீங்கத் தோய்ந்தன ரின்ப முற்றார்
பன்னுமெய்க் கருணை தானே பாந்தது தீர்த்த மாகி. (௩௦)

கங்கையு மிதனை யொவ்வாள் கடவுண்மா தீர்த்த மெல்லா
மிங்கிதி னுள்ள வென்றே யியம்பலாங் குட்ட நோயும்
பங்கமி தீர்த்தந் தோயிற் பறந்திடு முத்தி காமன்
றுங்கமார் தீர்த்த மூழ்கத் தொல்கதி யடைவ னன்றே. (௩௧)

ஞானத்தை யடைய வெண்ணி நவின்றிடு பிரம சாரி
தானத்தைத் தருமந் தன்னைத் தவறின்றிச் செய்யுமில் வாழ்வோன்
கானத்தை யெய்தி நோற்குங் கடமைகொ ணிலையி னிற்போன்
மோனத்தை யெய்தி னேனு மூழ்குதல் வேண்டு மீதில். (௩௨)

கடிகமழ் தீர்த்தந் தோய்ந்த காற்றுலவ மிடத்தி னுண்டாங்
கொடிசெடி மரமே பட்சி கோவின முத்தி சேரும்
படிதரிற் பவனஞ் மெய்யிற் பிதிரரு மகிழ்வர் பொல்லா
மிடிதவிர் தீர்த்த மூழ்கி மீயுயர் மனித னேனேன். (௩௩)

முறைமையிற் பிதிர ரானோர் முதமுறத் தருப்பித் தானே
லறைதரு மெழுபத் தொன்றே யாகிய குலங்க டம்மை
நிறைதரு கரையிற் சேர்ப்ப னீண்டதோர் கரையை நண்ணி
நெறிமுறை பிண்ட தான நேயமாய்ச் செய்வா னாயின். (௩௪)

உத்தமக் கயையி லன்றி யோங்குபல் குனிப்பேர் கொண்ட
நித்தமாந் தடத்தி னூடு முருத்திர நீண்ட பாதச்
சுத்தமாந் தலத்திற் செய்யுந் தூயதோர் பிண்ட தானச்
சத்தியப் பலனும் வந்து சாருமென் றறிஞர் சொற்றார். (௩௫)

புண்ணிய வுதகத் தன்னிற் புகல்செவி யளவு நின்றே
யெண்ணுக வைந்தெ ழுத்தை யீரைந்து நூறு கொண்ட
கண்ணிய முறையே நன்கு கணித்திடி னெழுத்தொன் றுக்கு
நண்ணிடுஞ் செபமு நாடி னியுதமா மென்பர் நல்லோர். (௩௬)

வேறு

பரவுபுகழ் மந்திரங்கள் பலவற்றை நாபிவரை
விரவியநீர் புகுந்துநின்று விருப்பமுடன் செபஞ்செய்க
வொருதினத்திற் செபித்ததான வொருமந்திரமத னுக்கு
மருவிவருமனேக மாகுமந்திரத்தைப் பன்மு றையாய் (௩௭)

விருப்பமுடன் செபஞ்செய்த விழுமியதோர் பயனுண்டாந்
திருப்பயிலு முனிவரரே செப்புவதென் மிகுதியாக
வருப்பமுறு பொருளனைத்து மணையுமா தீர்த்தமதி
லொருப்படுநற் சிந்தையுட னொருமுறையே தோய்ந்திடுக. ()

வேறு

நேசமுட னறுமதிய நியமமாக முழுகிவரி னிருத்தனுனே [னு
ஞுசில்பெருங் கருணைசெய்ய வருமகவை யடைந்திடுவள் மலடிதா
மாசுபடு சோகமுற்றோன் வேறுவழி மனங்கொளாது மதியமூன்று
வாசமுறு தீர்த்தமூழ்க வழிக்கொண்டு விலகிடுமச் சோகந்தானே.

மூன்றுறுமத் தீர்த்தத்தில் விதிப்படியே முழுகிவரின் வருட
மொன்றிற் - பந்தமின்றி வித்தையெல்லாம் பெறுவனெனப்பகர்ந்
திடவும் வேண்டுங் கொல்லோ - அந்தகெடுந் தீர்த்தந்தோயி னமல
மாக்கு மன்பர்களே யாங்குச் சென்று - கந்தமுறு மதின்மூழ்கிச்
சித்தியெலாங் கைக்கொண்டு வாழ்க மன்னோ. (௪0)

வேறு

புண்ணியம் பயப்ப தாகிப் பொருளின்ப மறனை ஞானத்
திண்ணிய பொருள்க ளன்குந் தோய்பவர்க் களிப்பத் தேவன்
கண்ணிடை வந்த தீர்த்தக் காதையை யெடுத்துச் சொன்னோம்
பண்ணிய றுவின் செல்வி பாரதி தவமுஞ் சொல்வாம். (௪௧)

கிருபா சாகர தீர்த்தப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௨௨0

## வாணி தவஞ் செய் படலம்



சீரணி திருநெல் வாயிற் சிவபுரே சனைத்தேன் கொன்றைத்
தாரணி சடையான் றன்னைத் தவம்புரிந் தேத்து மென்சொற்
பாரதிக் கருள் புரிந்த பைங்கொடி பங்கி னானைப்
பூரண மாகின்ற பொரு ளினைப் போற்றி செய்வாம். (௧)

செந்தமிழ் நிலமா மென்று செப்பிய சோழ நாடாம்
பைந்தொடி மென்றோள் பூண்ட பார்மகண் முகமாய் மன்னு
மிந்தமா நிலத்தோர் யாரு மெழிற்சிவ புரியாம் பேரைத்
தந்தனர் வழங்குந் தாவில் சிவபுர நகரந் தானே. (௨)

முத்தமிழ் விரகன் காழி முனுநக ரவத ரித்தோன்
மெய்த்தமிழ் மறையன் கண்ணே மேவும்பேர் திருநெல் வாயி
லத்தகு தலந்தான் றில்லை யருமறைச் சிரத்தின் மேலா
யுத்தம தலத்தி னுள்ளு முத்தம தலமாய் மன்னும். (௩)

சிறப்புறு தில்லை மேலாஞ் சிவபுர மதனின் மேலாம்
பிறப்பினை பிறப்பை யஞ்சிப் பேணுவார் தமக்கு முத்திச்
சிறப்பினை யளிக்கு மந்தச் சிவபுரஞ் சார்ந்து வாணி
தெறப்படு நிலைய ளாகிச் செய்த னடவந்தான் மன்னோ. (௪)

செய்யாற் றவத்தைச் செய்யுஞ் சீரிய ளுலக மாக்கு
மையனைக் கணவ னாக வடைதரு விருப்பி னாலே
பையர வணிந்த வானோன் பாகத்தை யழகு செய்யு
மையையைத் தியானஞ் செய்வா ளாகியம் மனுவை யெண்ணி. (௫)

விரிந்திடு மிதய மென்னும் வெறிகமழ் மலரில் வைத்துத்
திருந்துற வுமையை நாளுஞ் செபஞ்செயப் பன்னாட் சென்று
பொருந்தன நகையாள் வாணி முயறவ மதற்கி ரங்கி
யரந்தையை யகற்ற வெண்ணி யம்பிகை வெளியே தோன்றி. (௬)

என்ன காரியத்தை யெண்ணி யிருந்தவஞ் செய்வாய் வாணி
நின்னதாந் தவத்தி னுக்கு நீடிய மகிழ்ச்சி கொண்டோம்
முன்னிய வரந்தா னென்னை முறைமையிற் றருவோ மென்று
பன்னின ளதனைக் கேட்டுப் பாரதி மடந்தை தானும். (௭)

தேவரு மசுரர் தாமுந் தொழுதிடுந் தேவி போற்றி
மேவரும் பரையே போற்றி வேண்டிய வளிப்பாய் போற்றி
மூவரும் வணங்கி யேத்து முதல்வியே சிவையே போற்றி
யாவரும் யாவு மாகு மிறைவியே போற்றி போற்றி. (௮)

என்றுபன் முறையும் போற்றி யிறைஞ்சிப்பின் மேரு வென்னுங்
குன்றவில் லுடைய கோவைக் கொழுநனுக் கொண்ட தாயே
யின்றெனக் கிரங்கி நீயு மிங்கெழுந் தருளி னாயோ
வுன்றனைச் சரண் புகுந்தே னுவமையில் கருணை கொண்டோய் ()

யாரக முழுது மாக்கும் பரமனைப் பதியா வேண்டிப்
பூரணை யளிப்பா யென்னப் பொன்மலை மங்கை சொல்வாள்
ஏரணி பிரம னின்னை யேற்பனுன் மனைவி யாகத்
தாரணி தனையுஞ் செய்வன் சார்ந்தவுன் னுடனே கூடி. (௧௦)

இந்தவா றருளி யம்மை யேகலு நாவின் செல்வி
அந்தநல் வரத்தைப் பெற்றே யயனைத்தன் கணவ னாகச்
சிந்தையின் மகிழ்ச்சி யோடு செய்தவப் பேற்றாற் கொண்டு
முந்துமா திருகா தீர்த்த முயறவ மதனுங் கண்டாள். (௧௧)

என்று மெய்ச்சூதன் கூற விருந்தவர் மகிழ்விற் கேட்டுத்
துன்றிய சூதன் மேலுந் தொடர்ந்தெழுத் தலந்தா னெங்கே
மன்றமேவ யீசன் வைகு மிலிங்கத்தின் மாண்பு மென்ன
வின்றுநீ யிரண்டுஞ் சொல்வாய் நிச்சயம் பெறவே யென்றார் (௧௨)

தெற்றென வுணர்ந்த சூதத் திருமுனி யவர்சொற் கேட்டு
மற்றிவை சொல்வா னிந்த மலிபுகழ்த் திருநெல் வாயில்
சுற்றிலுங் குரோச மொன்று சூழிடங் கொண்ட தாகி
யெற்றைய நாளுஞ் செல்வே யிருங்கவின் கொண்டு மன்னும் (௧௩)

துங்கமா முனிவர் தம்மாற் றோன்றிய தலமே தீர்த்த
மங்கதன் புறத்தே சூழ மாவயி னடைந்து தெய்வப்
பங்கமில் தீர்த்த மூழ்கிப் பரசிவ பூசை செய்வார்
தங்குபல் சித்தி யெல்லாந் தருவன வவைதா மன்றே. (௧௪)

தொன்மறை விழுமி தாகச் சொல்லிய புருடார்த் தங்க
ளின்பமு மறனும் வீடு மியல்பொரு ளென்னு நான்கு
மன்பதைக் களிக்கு மென்பர் மற்றவை சோதி யாகி
யிந்தலந் தன்னி லுள்ளார் யாவர்க்கு மருள்வ ழங்கும். (௧௫)

கின்னா ரியக்கர் சித்தர் கெழுமுகந் தருவ ராமேனோர்
மின்னுசா ரணர்பி சாசர் மிக்ககாத் தியர்க ளாலும்
புன்னிய தேவர் மாணி பத்திரன் முதலோ ராலுந்
துன்னியெப் போழ்தும் போற்றித் துதிசெயப் படுவ தாகும். (௧௬)

விளங்கிய பிரமந்தன்னை விசாரஞ்செய் முனிவர் தாமுந்
துளங்கலில் பத்தி யோடு தூமலர் கையி லேந்திக்
களங்கனி யிடற்றி ஞனைக் கண்ணுதற் பரனை நாளும்
வளங்கனி பூசை செய்து வாழ்ந்திருப் பார்க ளாங்கே. (௧எ)

உருத்திர மோது வொரு மோய்ந்தநற் புலன்க ளுள்ள
கருத்தமை முனிவர் தாமுங் காதலான் முதனூல் வேதந்
திருத்தமாய்ப் பயில்கின் றோருந் தெள்ளிய நீறு பூசி
யுருத்திர மணியும் பூண்ட வுருவரு மங்கை யுள்ளார். (௧அ)

மாசிலாப் பூணூல் பூண்டு வற்கலை யாடை சூழ்ந்து
தேசுறு சடைக டாங்கிக் கமண்டலந் திகழுங் கைடர்
பாசவல் வினையைத் தீர்க்கும் பரமவைந் தெழுத்தை நாளு
நேசமாய்ச் செபஞ்செய் கின்ற நெடுந்தவ ராங்க ளுள்ளார். (௧௯)

சங்கரா விறைவா போற்றி தாணுவே சோமா போற்றி
திங்களை முடியிற் கொண்ட செவியாளிப் பிழம்பே போற்றி
மங்குல்சூழ் திருநெல் வாயின் மன்னிய வுச்சி யப்பா
வெங்களை யடிமை கொண்ட வேந்தலே போற்றி போற்றி. (௨0)

அருமறைப் பொருளே பிமா வருணனே பவனே போற்றி
பெரியவுக் கிரனே போற்றி பேசரும் பொருளே போற்றி
யரியயன் மகவான் வானோர் யாவரு மாகி நிற்பாய்
உருகிய நெஞ்சர் காணு மொருவனே போற்றி போற்றி. (௨௧)

என்றனர் வணங்கி யேத்தி யிருந்தவ ரெங்குஞ் சூழத்
துன்றிய திசைக ளெங்குந் துந்துபி முழுங்கா நிற்ப
வென்றிடு சிவபு ரேசன் விளங்கிழை யுமையா ளோடு
மன்றிடை நடிப்போ னந்த மகிமைசேர் பதியில் வாழ்வான். (௨௨)

நான்மறை வேள்வி யாதி நவிலுமோங் காரஞ் சத்தி
மேன்முறை பதிந்தோர் கற்கு மேன்மைசா லாக மங்கள்
கான்மலி கங்கை யாதி கடவுண்மா நதிக ளெல்லாம்
வான்மலி வடிவங் கொண்டு வித்தைபுக வணங்கி நிற்ப. (௨௩)

பொற்பிரம் பேந்தி நந்தி பொருகணை நாதர் காப்பச்
சிற்பரச் சனக ஞாதி செய்தவர் தியானஞ் செய்ய
விற்பொலி கயிலை மீதா விளங்கியே யிருத்தல் போல
வற்புத னுச்சி நர்த னமர்ந்தன னுமையா ளோடும். (உச)

வித்தைகட் கீசன் வேறு வேறென விளங்கா நிற்கு
மெய்த்தகு பூதங் கட்கு மிக்ககோ ரீச னாகு
மத்தனும் பிரம னுக்கு மதிபதி விண்டு வுக்கு
நித்தனும் பிரண வத்தி னெடும்பொரு ளாகு மன்றே. (உரு)

புரந்தர னயன்மான் மற்றும் புங்கவர் பத்த ராமோர்
நிரந்தரந் திருநெல் வாயி னீடிய பதியின் கண்ணே
யிருந்தருள் ளென்று வேண்ட விறைவியோ டமர்ந்தி ருப்பா
னரக்கதையை யகற்றி யார்க்கு மருள்செயுங் கருணை மூர்த்தி (உசு)

உலகரு ளன்னை யாகு முமை யுடன் மேவி யாவ
னுலககா ரணனா யங்கே யுறைகுவன் வான நாட
ரலகிலர் வணங்கி யேத்த வமர்ந்துள னங்கே யன்றே
யிலகிய விதய மூலக் கிரந்தியு மில்லை யாகும். (உஎ

பற்றுசந் தேக மெல்லாம் பற்றவிட் டகலும் பன்னுண்
முற்றுவல் வினையு மாயு முதல்வனைக் காணும் போது
கற்றுணர் மறையிற் சார்ந்து காணுறு மிருதி தன்னிற்
றெற்றென நினைப்பக் கேட்பச் சிந்திக்கப் படுவோன் யாவன். ()

அங்கவன் றிருநெல் வாயி லமர்சிவ னென்று சொல்வார்
தங்கிய பிறவி தீருந் தரிசனஞ் செய்யின் மாயன்
பங்கயன் முதலி னோர்கள் பதங்களுங் கடைக்க ணோக்கா
லெங்கினி தெய்த லாகு முத்தியு மிவனா லுண்டாம். [உகூ]

இவனையே யல்லான் முத்தி யீபவன் யாவ னுள்ளான்
இவனையே விராட்டு மென்ப ரிவனையே சுராட்டு மென்பர்
இவனையே சம்ராட் டென்ப ரிந்திரன் பிரமன் மாயன்
இவனையே யட்ட மூர்த்தி யெனமறை யறையு மன்றே. [௩0]

நண்ணிய வணுவி னுள்ளு நண்ணிய வணுவு மாகி
யெண்ணிய மகத்தின் மேலா யிலகிய மகத்து மாகி
நண்ணிய வுலகஞ் சாக்கு நாயகப் பொருளு மாகிப்
புண்ணியச் சுவண மார்க்கப் புனிதரு மிடப்பால் வைத்து [௫௧]

பத்தரைக் காக்க வேண்டிப் பரமனும் விளங்கா நிற்பன்
சித்தமும் வாக்குஞ் செல்லாச் சிவன்றனைப் புலனை யென்று
சுத்தரா முனிவ ரானோர் தொல்பதி யதனிற் காண்பர்
நித்தனை யருட்கண் கொண்டு நேயத்தா ரறிவர் தாமே. [௫௨]

ஞானத்தி னனலை மூட்டி நவிலுமஞ் ஞான மென்னுங்
கானத்தை யெரித்த மேலோர் கரையறு பிறவி தோறு
மீனத்தை யொழித்து நன்று மீட்டுபுண் ணியமுள் ளோரு
மோனத்தை யுடையோர் தாமு முதல்வனை நேரிற் காண்பார். [

உலகுக்கா தார மாகி யுதித்திடு மாயை நீங்கி
நலமிலாத் துயரு மின்றி நாடிய திருநெல் வாயிற்
றலமிசை யிறையை யன்பாற் றரிசனஞ் செய்வோர் தாமுங்
குலவுகா ரியந்தான் வேறு குயிற்றிட வுளது கொல்லோ. [௫௪

என்றுமா தவனுஞ் சூத னியம்புதல் கேட்ட மேலோர்
நன்றறி சூத பேறு நலமிகு சிவபு ரத்தி
லென்றுமே யகலா னாகி யெழில்வளர் கனக வல்லி
யொன்றிய விடப்பான் மேவ வுச்சியப் பனுறை யீசன். [௫௫]

பிறப்பெனும் பிணியை நீக்கும் பெருந்தகை யாகி யெம்மான்
சிறப்புடன் விளங்கி யுள்ளான் சீரிய கால மென்று
பெறப்படும் விசேட மாங்குப் பேணுவ தில்லை யென்றாய்
திறப்படுந் தேவர் யாருஞ் சேவைசெய் திடுவ தெங்ஙன். [௫௬]

அன்னவன் றனை தில்லை யம்பல மதினு நாளு
மன்னிய திருந டஞ்செய் வகைமையென் னிவற்றை நீயே
யுன்னுதல் வேண்டு மென்று பழுதறு முனிவர் கேட்ப
நன்னயச் சூத னன்னோ னவிலுவ னைய நீக்க. [௫௭]

சுத்தமெய்ஞ் ஞான சோதித் தொல்வடி வுடைய தாகு
நித்தமாம் பிரம மென்பார் நிகழ்த்துதன் னிச்சை யாலே
மெத்திய தானே யெங்கு மேவியே யனேக மாவேன்
சித்தது நினைவு கொண்டு சித்தலா மாயை யாலே. [௩௮]

வேற்றுமைப் பட்ட வான வேறுபல் வகைய வாக்கிச்
சாற்றுபி ரமாண்ட மாகிச் சமட்டியின் விராட்டு மாகுந்
தோற்றுபல் வகைய ராஞர் தொன்னெறி யுயிர்க ளெல்லா
மீற்றினைப் புரியு மீச னெவற்றினு மருவி யுள்ளான். [௩௯]

சத்தொடு சித்து மாகித் தனக்கிணை யின்றி வானை
யொத்தோர் வியாபி யாகி யுற்றிடு விகார மில்லான்
நித்தனுக் கண்டந் தன்னி னேர்படு மாதா ரங்கள்
சித்தமா மவையு மாறாய்ச் செப்புவர் நினையுங் காலே. [௪0]

ஆதியா முபாசிப் போருக் கருளுவ னிறைவன் றானுங்
கூறிய விராட்டி னுக்குக் குலவிய விதயந் தில்லை
மாறிலா நடனஞ் செய்து மன்னுயிர்க் கருள்ளுங் குத்
தேறிய புலியும் பாம்புந் திருநடங் காணு மன்றே. [௪௧]

அண்டமா முருவந் தன்னை யடைந்திடும் விராட்டி னுக்கே
யொண்டவர் பயினெல் வாயி லுருத்திரக் கிரந்தி யாகும்
விண்டிடற் கரிய வீட்டை விரும்புவோர்க் கீசன் றானும்
பண்டையிற் கிரந்தி பாற்றிப் பார்த்திடச் செய்வன் றன்னை. [௪௨]

உருத்திரக் கிரந்தி நீங்கா தொருமகன் வீடு சேரக்
கருத்துறல் பசுவை யுண்டு கடக்கலாம் புலமை யென்றே
யருத்திகொள் வதனை யொக்கு மருமறை யிதயந் தன்னில்
வருத்திய கிரந்தி தன்னை வகுக்கவும் படுமோ வேறாய். [௪௩]

என்றுதான் றுணிந்து கூறு மிதயமாங் கிரந்தித் தானந்
துன்றிய திருநெல் வாயிற் றொல்பதி முத்தி காமன்
சென்றனன் றியானஞ் செய்து சேவடி சேர்ந்து வாழ்வன்
கன்றிய கிரந்தி மாய்க்குங் கடவுளு மங்கே யுள்ளான். [௪௪]

அவனொரு கடவு டானே யரியதோர் முத்தி யீவா
னெவனொரு மனிதன் றானு மிருதயக் கிரந்தி நீங்குந்
தவந்தரு சமயஞ் சார்வான் றருமவன் றனக்கே யென்றும்
பவமிலாப் பரன்பாற் புத்தி பதியுமா மியல்பி னாலே. (சரு)

காசியிற் றில்லை தன்னிற் கருத்துறு பிறத லத்தி
லீசனைத் தியானஞ் செய்தா விருங்கதி யடைத றிண்ணை
நாசமி னடமே தில்லை நற்பதி தன்னின் மேலாங்
காசகல் முத்தி தானுங் கருணையாற் கிடைக்கு மாங்கே. (சசு)

வேறு

முத்திதரு மம்பலத்தின் முக்கியமாந் திருநடனஞ்
சித்திதருஞ் சிவபுரத்திற் சிறந்ததாகுங் கிரந்திநீக்கம்
பத்திசெயி னேயொருகாற் பரதமுமாங் கேயுண்டா
முத்தமராங் கபிலன்முன் னுயர்தவஞ்செய் முனிவரர்கள். (சஎ)

பற்றிவருங் கிரந்திதனைப் பாற்றுதற்கு விரும்பினவர்
கற்றைவரை யுடையபிரான் கழலிணையைப் பூசைசெய்து
முற்றிவரு மன்னதனை மூலமறக் களைந்தார்க
ளூற்றறிந்து தியானஞ்செய் துயர்முத்தி யுறல்வேண்டும். (சஅ)

வேறு

ஆதலி னிதுவே முத்தி யளித்திடுந் தலமா நாறு
மேதகு பிறப்பெ டுத்து மேன்மையைக் கூற லாமோ
வேதமுன் வகுத்த நாவின் மேலவன் றானு மிந்தச்
சீதநீர்த் திருநெல் வாயிற் சிறப்பினை யியம்பு வானோ (சகூ)

ஈசனுக் குவந்த தாகி யெளிதினின் முத்தி நல்கிப்
பேசரும் பதியின் கண்ணே பெட்புட னுறைவோர் தாமு
நேசமார் தந்திபோல நெட்டிலை வேலன் போலப்
பாசமாய்க் களிப்பிற் றோய்வர் பகர்வதென் பதியின் மேன்மை. ()

செய்தவம் பூசை தானுஞ் செபமெனு மிவைக ளெல்லா
மெய்துவ தனுவா றுலு மியம்பிய மேரு வாகு
மையனுங் கருணை செய்தா லடைந்திடார் பிறவி தன்னை
நொய்யதாம் விலங்கென் றாலு நோற்றிட வுரிய தாகும். (ருo)

மின்னவிர் சடையோன் றாளு மென்மல ரடியை வாழ்த்தி
னின்னலாம் பிறவி வேலை யெடுத்தருட் கரையிற் சேர்ப்ப
னென்னவே யியம்பச் சூத னிருந்தவ முனிவர் யாரு
முன்னமார் திருவெல் வாயி லரன்கழன் மறவா ராஞர். (ருஉ)

தருங்கலை வாணி யென்பா டலைவியாஞ் சுவண வல்லி
யிருங்கழல் பூசை செய்தே யேடுடை மலரோன் றன்னைப்
பெரும்புகழ் கணவ னாகப் பெற்றதோர் புராணஞ் சொன்னோம்
அருஞ்சிவ லிங்க மேன்மை யறைகுவ மினிமேல் யாமே. (ருங)

வாணி தவஞ்செய் படல முற்றிற்று.

ஆகூ செய்யுள் உஎரு

## சிவலிங்க மகிமைப்படலம்

ஆரண முடிவுக் கேரு வனுதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பூரணப் பொருளாய் வேறாய்ப் புவனமும் பிறவு மாகி
நாரணன் றனக்குச் சங்கு நல்கிய வுச்சி யானைக்
காரண முதலை நாளுங் கழலிணை கருதி வாழ்வாம். (க)

முன்னொரு கற்பந் தன்னின் முடிமிசை மகுட மின்னப்
பன்னரும் வடிவங் கொண்டு பசுங்குழை செவியி லங்க
மன்னுவிற் கதைவாள் சங்கு மாற்றருந் திகிரி யென்னு
மின்னவை காத்தி லேந்தி யிந்திரை மணாளன் றானும். (உ)

ஆக்கிய வுலக மூன்று மளவிடற் கரிய வன்மை
யூக்கிய செயலி னாலே யொழிவறக் காத்தல் செய்து
தாக்கணங் கமரு மார்பன் றக்கவை குண்டந் தன்னிற்
பாக்கியம் பலவு மெய்திப் டார்மகள் களிப்ப வாழ்வான். (ங)

தேவரு மசுரர் தாமுஞ் செயசெய வென்று போற்றத்
தாவரு மியக்க ராேனார் தொழுதிடப் பன்ன கேசர்
ஏவருந் துதித்தல் செய்ய வெழிலியின் வண்ணத் தானுங்
காவரு தொழின்மேற் கொண்டு கண்ணிமை போலக் காப்பான்,()

இன்னண முலக மூன்று மியம்புதன் றிகிரி சென்று
மன்னிய காலந் தன்னில் வரமுனி காசி பன்பான்
மின்னிய றிதிக்கு மைந்தர் மீயுயர் வலிமை கொண்டோர்
இன்னலை யாவ ருக்கு மியற்றுவோ ருளரா னோரே. (௫)

வீரியம் வலிமை யூக்கம் விளங்கிய முயற்சி யுள்ளோர்
க ரிய மெவையுஞ் செய்து கடையுற முடிக்க வல்லோர்
நேரிய கரத்தி லொன்று னீண்டதோ ரண்ட மெல்லாஞ்
சீரிதிற் பிளக்கு மாறு செய்திடும் பழக்க முள்ளோர். (௬)

மலைகளைப் பிடுங்கிப் பந்தாய் வானத்து வீசி யேழா
மலைபடு கடலி னீரை யள்ளியுண் டிறலர் சில்லோர்
நிலைபடு பூமி தன்னை நீடிய வாகா யத்தை
யலைபடக் கீழு மேலு மாக்குறுஞ் சமர்த்தர் சில்லோர். (௭)

எண்டிசை காப்போர் தாமு மெதிர்ப்பரேற் பொருது தாம்வென்
கண்டிட வல்லோர் பல்லோர் கலைமதி ஞாயி றென்னுந்
திண்டிறல் கொண்டோர் தம்மைச் செல்வழி தடுக்கு மாற்றல்
கொண்டவர் பல்லோ ரம்பா கூறுவ தினிமே லென்னே. (௮)

திக்குறு மானை யெல்லாந் திரண்டிட வொன்று சேர்க்கு
மிக்கபே ராற்றல் கொண்டோர் மேன்மைசால் புவன மூன்றுந்
தொக்கதோர் மேசத் தாலே தோற்றிய வானம் போலப்
புக்கதோ ரிருளி னாலே பூமிபோ னிறைந்த மன்னே. (௯)

அக்கினி சாந்த மான னுதித்த னொளியி ழந்தான்
புக்குநே ரோடுங் காற்றும் பொள்ளென நடையின் றாகி
வக்கிர கதியை யுற்று வழங்கவுந் தாப கேது
மிக்கெழுந் துலைவுற் பாத மேலிட்ட துலகின் மன்னே. (௧௦)

திசையினிற் புகுந்து காக்குந் தேவரை யகற்றி விட்டு
நசைபொருள் கொள்ளை கொண்டு நாரியர்ப் புணர்ந்து பின்ன
ரிசைபெறு பிரமன் வாழு மெழிலுல கதனைச் சார்ந்து
தசைநெகிழ்ந் தொழுக வேதற் சாடினா ரிரிந்தார் தேயோர் (௧௧)

விண்டுவி னுலகை யான வைகுண்டஞ் சேர வன்றோர்
கண்டகர் வருகை தேர்ந்து கண்ணனு மறைந்து சென்றான்
கண்டிலர் புரத் துட்புக்குக் கனகமு மணியுங் கொள்ளை
கொண்டனர் கணங்க டம்மைக் குத்தினர் வருத்தி னாரே. (௧௨)

இந்திரன் பதுங்கி யோட வில்லுறை மனையா ளோடு
மந்தர நாட ரோட வணியிழை மகளி ரேங்கி
நைந்தனர் புலம்பி யோட நாட்டமுன் றுடையான் றோழன்
நந்தன வனத்துட் புக்கா னவ்வதென் வலியார் மேன்மை. (௧௩)

வேதமு மோத லின்றி வேள்வியுஞ் செய்த லின்றி
யேதமே நாளு மோங்க விந்திரன் முதலாந் தேவர்
போதமும் பசிநோய் வாட்டப் பொன்றினர் சுவாகா வென்றும்
போதமில் சுவதா வென்னும் பேசுவ தொழிந்த வந்தோ. (௧௪)

பூவில்வாழ் முனிவ ரானோர் பொலிவுறு தவங்கை விட்டார்
ஏவலை புரிந்து நாளு மியன்முறை தவறி நொந்து
சாவரு நிலைய ரானார் சாதுவா ரேறென் செய்வார்
பாவமும் பழியு நோக்கார் பண்பிலாத் தீநெறியின் மைந்தர். (௧௫)

சடையினைப் பிடுங்கச் சில்லோர் தளர்ந்தன ரோட லுற்றார்
கிடையயில் மறையில் வல்லார் கேள்வியாற் புலமை மிக்கார்
முடையுலா லமர்ந்து சென்று முதுகுனாங் கழுதார் சில்லோர்
நடைமெலிந் தியங்க லுற்றார் நான்மறை யாளர் சில்லோர். (௧௬)

அழுகுறு மனிதர் தம்மை யானெனக் கதறி யேஞ்சப்
பழுகுறு மகவர் சில்லோர் பரந்திடும் வாயாற் கௌவிச்
சழிபெருங் கனியிற் றேடுங் கறிகதுனர் விழுங்கல் செய்வார்
பழியுற முனிவர் தோண்மேற் பாரிடைத் திரிவர் சில்லோர். (௧௭)

ஆழ்கடல் கலக்கி யெங்கு மங்குள மீனைக் கொள்வார்
ஏழ்பரி யெனும்பேர் கொண்ட வியலுறு வாசி பூண்ட
காழ்கொளுந் தேர்மே லேறிக் கனைகட லுலகந் தன்னைச்
சூழ்வரு வெய்யோற் சாடித் தேரையுங் கொலைத்தார் சில்லோர். ()

வலிகெழு திதியின் மைந்தர் வான்முத லுலக மூன்றின்
மலிகெழு துயரஞ் செய்ய மன்னிய வுயிர்க ளெல்லாங்
கலிகெழு மூழி தன்னிற் கலங்குமா போற்க லங்கி
நலிவினை யடைந்த வான நாடரு மஞ்சி னாரே. (ககூ)

அஞ்சிய வானத் தாரு மாடக மேருச் சென்று
விஞ்சிய வடபா லுள்ள வேதனைக் கண்டு போற்றி
யஞ்சலி செய்த கைய ரருமறை பயிலு நாவாற்
செஞ்சவே துதித்தல் செய்து செப்புவர் துயர மெல்லாம். (உ0)

உலகினைப் படைக்கு நாதா வொப்பிலா வறிஞர் கோவே
பலகலை வேத மெல்லாம் பகர்பொரு ணீயே யன்றோ
யலகிலாச் செல்வம் யாவு மளித்திடும் பிரம வைந்தா
யிலகிய முகங்கள் கொண்ட விறைவனே போற்றி போற்றி. (உக)

நான்முகத் திறைவா போற்றி நலந்தரு தொழில்க ளைந்து
மேன்மையிற் செய்வாய் போற்றி மெலிந்தவர் துணைவா போற்றி
தானவ ரேவ லாற்றித் தளர்ந்தன மந்தோ வந்தோ
வீனரைப் போல யாங்க ளிராப்பகல் வருந்தி யெய்த்தோம். (உஉ)

அகலிடம் படைப்பாய் போற்றி யையனே போற்றி போற்றி
புகலிடம் வேறு காணேம் புலவர் தம்பெரும விண்ணே
நகலிடு பகைவர்க் கஞ்சி நாணினை நிற்பாற் புக்கேங்
தகவுட னெம்மைக் காப்பாய் தாமரைத் தவிசில் வாழ்வோய். (உங)

என்றனர் போற்றி செய்ப விளகிய நெஞ்ச னாகி
நின்றவத் தேவ ரோடு நீடுபா லாழி கிட்டி
யன்றினர் துயர நீங்கி யானந்தக் கடலின் மூழ்க
வென்றிடு திகிரி யேந்தும் விமலனைக் கண்ணிற் கண்டான். (உச)

வேறு

ஏர்கொண்ட வீரைந்துநூற்றுக் காலெழில்கொண்ட மண்டபத்தி, னீர்கொண்ட மணிமுத்தவிதானமொடு நிலைகொண்ட மணிமந்தாரத், தார்கொண்ட கத்தூரிசந்தனத்தாற் றூபத்தாற்கமழ்ந்து தோன்றிப், பேர்கொண்ட வாயிரமாம்பண முடியாற் பொழுகு விளங்கித்தோன்ற. (உரு)

பார்கொண்ட சேடனெனும் பரியங்கமிசைத்துயிலும் பரமன் றன்னைக், கார்கொண்ட மேனியானைக் கடவுளரும்யோகியருங் கலந்துபோற்ற, நார்கொண்ட தும்புருவு மகதியாழ் நாரதனுங் கீதம்பாடப், போர்கொண்ட கிகிரிக்கைப்பெரு மானைப்பொன் னுடை யணிந்ததேவை. (உ௬)

திருமுடியின் மணிமகுடந் திகழ்ந்தோங்கத் திருத்துளவமா லைதோன்றத், திருவடியைத் தேவியிருவருடந் திருமாலைத் தேவர்கண்டு, திருவடியிற் பணிந்தேத்தித் தெள்ளமுதசாகரத்திற் றிளைத்துநாதன், பெருவடிவைப் பலகாலுங்கண்டு கண்டுபொந்தா மற் போற்றுவாரே. (உ௭)

மாதவனேயுலகோட்பு மன்னவனே வானவரைத் தொடர்ந்துவந்த தீதகற்றிவாழ்விக்குந் தேவேவருந் செல்வமே போற்றிபோற்றி போதனைநின் றிருவுந்திபூத்தாய் நீ பாதகத்தைக் காத்தாய்நீயே வேதனைசெய்தைத் தியரால்வாடிமிக வருந்துநமைக் காப்பாய்நீயே.

மங்களமாம் வடிவினனேவளர் கருணைச்சாகரமே போற்றி போற்றி, கங்கணத்தை யணிந்தவனே காமனையும்பெற்றவனே கடைக்கணோக்கா, லெங்களையுந் துயர்நீக்கி யாட்கொள்வாயிறை யோனே போற்றிபோற்றி, திங்களைநேர் நுதலாளைத் திருமார்பிற் கொண்டவனே போற்றிபோற்றி. (உ௯)

வேறு

கருமத்தின் சாட்சி யானாய் கானமர் கேழ லானாய்
தருமத்தின் கரையு மானாய் சப்புவு மானாய் நின்ற
னுருவத்தின் கூறே யான வுலகத்தை யழிப்ப ரொன்னார்
கருவத்தைக் கொண்டோ ராகிக் கணக்கிலா வரந்தை செய்வார்.()

இன்றுநீ யெம்மைக் காப்பா யிறைவனே போற்றி போற்றி
யென்றனர் துதித்து வேண்ட வெழிலியின் வண்ணத் தானு
நன்றுறுந் துயரை மாற்றி நன்மையும் புரிவோ மேருச்
சென்றுநீ ரிருமி னென்றான் றேவருந் திரும்பிச் சென்றார். (௩௧)

நெடியவ னரந்தை செய்யு நீடிய வசுரர் தம்மை
மடியுமா புரிதற் கான வகையினை மனத்தி லெண்ணி
முடிமிசைக் கங்கை சூடு முதல்வன்முன் னருளிச் செய்த
படியெலாஞ் சிந்தை செய்து பாற்கட னீங்கி னானே. (௩௨)

இலைமலி துழாய ணிந்த விறைவன் சுரரைக் காக்க
வலைமலி கடலை நீங்கி யவனியிற் றிருநெல் வாயிற்
கலைமலி தலத்தைக் கிட்டிக் கடிகமழ் கிருபா சிந்து
நலமலி தீர்த்த மூழ்கி நாதனை நினைந்து நெஞ்சில். (௩௩)

கடுந்தவம் பன்னாட் செய்து கண்டனன் மூல லிங்க
மடுந்திறல் பெரிதும் வாய்ப்ப வருச்சனை நாளுஞ் செய்வான்
படிம்பய னோங்கு மாறு பங்கய மலரி னாலே
கொடுந்தொழி லகலு மாறு குழகனைப் பூசை செய்து. (௩௪)

நீடிய கனியுங் காயு நிவேதனஞ் செய்து வேதம்
பாடிய நாமத் தாலே பரமனைத் தினமும் போற்ற
வாடிய கூத்தன் சின்னா ளகன்றபி னன்பின் வீக்க
நாடினன் பூவி லொன்றை நம்பனு மொளித்தா னோர்நாள். (௩௫)

விண்டுவுங் கமலப் பூவால் விமலனைப் பூசை செய்து
கண்டில னிறுதி நாமக் கமலத்தை யதுபோற் கண்ணை
விண்டிடக் கரத்தாற் றோண்டி வீறுட னருச்சித் தேத்த
வொண்டொடி பங்கன் றானு முளங்களி கொண்டா னன்றே. ( )

பத்தருக் கெளிய னாவான் பங்கயக் கண்ணற் பூசை
சித்தமேன் மகிழ்ச்சி பூப்பச் சிறப்புடன் புரிதல் கண்டு
சுத்தமா மிலிங்கந் தன்னிற் றோன்றின னுலகுக் கெல்லா
மத்தனு மனையு மாகி யமலனாய் நின்ற முன்னோன். (௩௭)

பாசமுஞ் சூல மாதி பல்படை பரித்த பத்துக்
கரங்களு முகங்க ளைந்துங் கருணைசெய் கண்மூ வைந்தும்
பரவுவெண் ணீற்று மெய்யும் பசுங்கொடி யிடமுங் கொண்டு
விரவுநீர் வேணிப் பெம்மான் விண்டுவி னெதிரே நின்றான். (௩௮)

கண்டனன் கமலக் கண்ணுற் கரையிலா னந்தக் கண்ணீர்
விண்டிடப் புளகம் போர்ப்ப விமலனை யுமையா ளோடு
தண்டம்போற் றரையில் வீழ்ந்து தாமரை யனைய பாதங்
கொண்டுதன் சென்னி சூடிக் கும்பிட்டு நின்றான் கண்ணன். (ந௯)

நின்றவன் றன்னை நோக்கி நிமலனு மருளிச் செய்வான்
நன்றுநீ பூசை செய்ய நாமிக மகிழ்ச்சி கொண்டோம்
இன்றிவண் வரந்தான் கேட்ப தியாதென விளம்பு கென்ன
வொன்றிய வன்பி னாலே யுளமகிழ்ந் தேத்திச் சொல்வான். (௪0)

சங்கரா போற்றி போற்றி சயசய போற்றி போற்றி
கங்கையைச் சடையில் வைத்தாய் காமனை யெரித்தாய் போற்றி
திங்களை யணிந்தாய் முன்னாட் டேவரைக் காக்க வேண்டிப்
பொங்கிய கடுவை யுண்ட புண்ணியா போற்றி போற்றி. (௪௧)

தேவரை வருத்து வோராந் திதிமகார்ச் செருக்க வேண்டி
மேவரும் படையை யீந்து மேன்மைசா லிலிங்க மாண்பு
மேவரு மூணரு மாற்று வியம்புதல் வேண்டு மன்றித்
தாவரு மடியே னுக்குந் தண்ணளி புரிதல் வேண்டும். (௪௨)

இவ்வித மாயன் வேண்ட விறைவனும் பரிதி போலுஞ்
செவ்விய சங்க மீவோஞ் செருத்திடு வன்மை சான்ற
திவ்விய மனுவு மீண்டுத் தெரிக்குதும் பெறுக வென்றே
யெவ்வெவர் தாமுங் காணு விலிங்கத்தின் பெருமை சொல்வான். ()

நாரணர் பல்லோ ராலு நான்முகர் பல்லோ ராலு
மோரணி யுருத்ரர் பல்லோ ரேனையர் யாவ ராலுஞ்
சீரணி யிலிங்கந் தானுஞ் சேவிக்கப் பட்ட தாகுந்
தாரணி தன்னின் வேறு சாற்றிடி னிதுபோ லில்லை. (௪௪)

அச்சுதா வின்னுங் கேட்பா யாண்டெவன் பூசை செய்வான்
நச்சிநாம் வசிய மாகி நன்மையே யவற்குச் செய்வோம்
கச்சியிற் காசி தன்னிற் கரைந்திடு பிறந லத்தி
லிச்சையை யளிப்ப தான விலிங்கமும் பிறிதொன் றில்லை (௪௫)

உத்தம லிங்க மேன்மை யுரைத்திட வல்லோர் யாவர்
வித்தகப் பிரமன் வானோர் விளம்புதற் கருக ராகார்
சத்திய மிதுவே யாகுஞ் சாற்றிய லிங்கந் தன்னை
மெத்திய பூசை செய்தாய் மேவின மதனா லென்று. (சசு)

விண்ணவர் பெருமான் றானும் விளம்பியே யிலிங்க மேன்மை
கண்ணனுக் கியைந்த சங்குங் கரமிசை யளித்து மேலா
யெண்ணுமந் திரமுங் கூறு மியன்முறை யுடனே சித்துப்
புண்ணிய விலிங்கந் தன்னுட் புகுந்தனன் சிவபு ரேசன். (சஎ)

சங்கினை மகிழ்ந்து பெற்றுச் சார்ங்கவில் லேந்தி னானுந்
தங்கியே நலிவு செய்த தானவர் தம்மை யெல்லாம்
பொங்குசங் கோசை யாலே பொன்றிடச் செய்து பூமி
மங்கையு முன்போல் வாழ வரன்முறை யாது காப்பான். (சஅ)

சிற்பர விலிங்க மேன்மை செப்பினஞ் சுருக்க மாகப்
பொற்புறு திருநெல் வாயிற் புண்ணிய தலத்திற் சென்றே
யற்புத விலிங்கந் தன்னை யன்புடன் பூசை செய்து
தற்பரன் கருணை பெற்றுத் தகவுடன் வாழ்க மன்னோ. (சகூ)

சீர்வளர் திருநெல் வாயிற் சிவலிங்க மகிமை கூறும்
பேர்வளர் படல மீதைப் பெட்புடன் படிப்போர் கேட்போர்
தார்வளர் கொன்றை வேணிச் சங்கர னருளைப் பெற்றுப்
பார்வளர் பிறப்பி லெய்தார் பரபதம் பெறுவர் தாமே. (ருO)

சிவலிங்க மகிமைப் படல முற்றிற்று.

ஆ. செய்யுள் ***.

---

# சிவலிங்க பூசாவிதிப்படலம்

அந்திவான் மதியஞ் சூடு மண்ணலை யங்க மாறுஞ்
சந்தமார் மறைக ளைன்குஞ் சாற்றிய முதல்வன் றன்னைத்
தந்தையுந் தாயு மாகிச் சராசர மீன்று ளானைச்
சிந்தையின் மன்னி ஞானச் சென்னியிற் கொண்டு வாழ்வாம். (க)

உத்தம லிங்க மேன்மை யுரைத்திடக் கேட்டோம் யாங்கள்
சித்தமேல் மகிழ்ச்சி பொங்கச் சீதரற் காழி யீந்து
தைத்தியர் மாளச் செய்த தகைமையு நன்று கேட்டோம்
நித்திய லிங்க பூசை நியமமு நவில்க மேலும். (உ)

வித்தக லிங்க பூசை விதிப்படி புரிதற் கேற்ற
வுத்தம விருது வென்ன வுயர்ந்திடு மாத மென்ன
சத்திய மந்தி ரந்தான் றிரவியந் தானென் பேசு
நித்திய வாசா ரந்தா னவிலுதி யிவைக ளெல்லாம். (ங)

இவ்வகை முனிவர் கேட்ப வியம்புவன் சூத மேலோன்
அவ்வயி னுள்ள லிங்க மருமறை புகழ்வ தாகித்
திவ்விய மாகித் தொன்மை திகழ்வது மாகி மேலாச்
செவ்விய பரமசோதி சொரூப மாய்த் திகழு மன்றே. (ச)

குறைதவி ரிலிங்க மேன்மை கூறிய தொகுதி வாய்ந்த
மறைகளே யிந்த லிங்க மகிமையை விரித்துங் கூறுங்
கறையிலை நோயு மில்லை காரண மில்லை முன்னோர்
முறைமையிற் பூசை செய்து முழுதருள் பெற்ற தென்பர். (ரு)

மந்திரம் பதிட்டை பூசை மற்றொரு கிரியை யில்லை
தந்திர மில்லை சாற்று மனுபவ மொன்றே போது
முந்திய ஞான ரூப மேன்மையின் விளங்கா நிற்குஞ்
சிந்தையி னினைந்த போதே சிதறிடும் பாத கங்கள். (சு)

சத்தொடு சித்து மான சதாசிவ னிலிங்க மானன்
நித்தனாந் சிவனுக் கில்லை நிகழ்த்திடு மிலிங்க மென்று
இத்த மீதாய்ந்து தேர்ந்து செப்பினன் விண்டு வென்பர்
உத்தம லிங்க மென்ப ருபாசிக்கற் பால தென்பர். (எ)

ஈசனைத் தியானஞ் செய்க விருதய கமலந் தன்னி
லாசிலா விந்து வான கமலமு மதற்கே யாகும்
காசகல் சிரமீ தான கமல மேல் யோகர் தாமு
நேசமார் கும்ப கத்தே பிராணனை நிறுத்தி யென்றும். (அ)

அருட்குறி யதனைக் கூடி யமர்தரு தியானஞ் செய்பின்
மருட்குறும் பகல ஞான மழைய முதூறிப் பாயுந்
திருவருண் ஞானந் தோன்றிச் செனனமே மரண மூப்புத்
திரைநரை யாவு நீங்கித் திருவடி சேர்ந்து வாழ்வார். (கூ)

ஐம்பொறி வழியே செல்லா தடங்கிச்சாத் துவிகஞ் சார்ந்து
செம்பொரு டியானஞ் செய்து திடம்பெற நிற்றல் வேண்டும்
நம்பரன் ஞான பூசை நவின்றனம் வலிமை யில்லார்
சம்புவைப் புறத்திற் பூசை தடையறச் செய்தல் வேண்டும். (க0)

வேறு

ஒத்தியலும் வெளிப்பூசை யோரிரண்டு வகையாகு
நித்தியமு நைமித்தியமு நித்தியநா ளாமுளது
சித்தியெலாந் தருநைமித்தந் திகழ்வதாகு மிடையிடையே
யுத்தமமாஞ் சிவபூசைக் கொப்பெனவொன் றுலகிலில்லை ()

வேறு

புனிதமா மறைபி லாகு மத்தினிற் புராணந் தன்னி
னினிதருண் மிருதி தன்னி லிலிங்கபூ சனைக்கு வேறாய்
வினவிடின் மேன்மை வாய்ந்து விளங்குவ தில்லை வானோர்
பனிமதி யணிந்த வேணிப் பரமனை நிகர்வோ ரில்லை. (கஉ)

மலரயன் படைத்து மாயன் மன்னிய காவல் செய்தும்
பலர்புகழ் பான்மை யாலே பன்னெடுங் காலம் வாழ்த
லலமலி யிலிங்க பூசை செய்ததோர் தவத்தாலன்றோ
மலவிரு ளகன்ற யோக மார்க்கரும் பூசை மாண்பால். (கங)

சற்பங்கள் பலவுங் கண்டு காயம துடனே வாழ்வர்
பொற்புறு மணிமா வாதிப் புகல்சித்தி யெட்டி னோடு
நற்புறு வித்தை செல்வங் கருணையே கீர்த்தி யாவுஞ்
சிற்பர விலிங்க பூசை செய்திடிற் சித்தி யாமால். (கச)

கருமத்தா லாகா வொன்றுங் கருதிய பூசை யாலே
வெருவரு சாபங் கூற வென்றிட வதனை மாற்றப்
பொருவரும் வலிமை யுண்டாம் பொருள்சொ லு மறிவு முண்டாஞ்
சரியெனக் கற்றிலாத சாத்திர மேயா னாலும். (கரு)

மருத்துவ ரியக்கர் சித்தர் மன்னிய கருடர் நாகர்
உருத்திரர் பிரம ராஞேர்க் குரியசீரார் பதமு மேலா
மருத்துழாய் மோலி யான்றன் வான்பத மிவைக ளெல்லாந்
திருத்தமா ரிலிங்க பூசை செய்பவ ரடைவா ரன்றே. (௧௬)

புதியவா னந்த மொன்று புகுந்தகே லதுதா னெண்ணின்
அதிகமா மிலிங்க பூசை யளித்திட வந்த தாகு
மதிதரு மிருதி வேத மன்னிய கரும மெல்லாங்
கதிதரு மொன்றில் வீழுங் கரைந்திட வியலுங் கொல்லோ (௧௭)

பரசிவ லிங்க பூசை பண்ணுதற் கருக ரல்லார்
வரமலி யங்கி கோத்ர மாகன்மஞ் செய்க வென்றே
யுரமலி முனிவர் சொன்னா ருபர்வுறு பிரம ஞானந்
தருவதா நித்த பூசை யனித்தியந் தருமே சித்தி. (௧௮)

இயலுறு காலை மூன்று மேற்றவை திகமே யான
மயலறு மனுவி னுலு மன்னுப சாரத் தானுஞ்
செயலுறு வதாகு முன்னர்ச் செப்பிய விலிங்க பூசை
பயிலுறு நித்த பூசைப் பண்பினை யினிமேற் சொல்வாம். (௧௯)

பிறங்கிய கிருபா சிந்துப் பெயர்புனை தீர்த்த மூழ்கி
நிறங்கிளர் நாபி மார்பு நெற்றிதோள் சிரமே கண்ட
மறங்கிளர் தூய வெண்ணீ றணிந்திட வேண்டும் பின்னர்ப்
புறங்கிள ருருத்தி ராக்கம் பூணுதல் வேண்டு மன்றே. (௨௦)

நித்திய கரும மெல்லா நியமமாய் முடித்துக் கொண்டு
புத்தியாய்ப் பொறிக ளைந்து புறத்தினிற் புகாமற் செய்தே
யத்தனைப் பிறவி நோய்க்கோ ரருமருந் தாகி மேலாஞ்
சித்தினை விம்ப மீது தியானித்து வணங்கல் வேண்டும். (௨௧)

தளியெதிர் வணங்கி யுள்ளே சேர்ந்துவா முகத்தோன் றன்னை
யளியுடன் கும்பிட் டேத்தி யண்ணலின் றிருமுன் சென்று
களியுட னூறு தீர்க்குங் காரியை வணங்கல் வேண்டு
மொளியுறு மனுவா லன்றி யோங்கிய வுபசா ரத்தால். (௨௨)

கணங்களே சுரரே நாகர் சந்தரு வரானோ ரேத்துங்
குணங்களைக் கடந்த கூத்தன் வாயில்சேர் குஞ்ச ரத்தின்
மணங்கிளர் கமல பாத மன்னிய வன்பி னோடு
கணங்கிளை ரூறு தீர்ந்து காரிய நன்மை யாக (௨௩

வழிபடல் புரிந்து பின்னர் வயிரவற் பூசை செய்க
தழைபடு மன்பி னோடுந் தம்பரன் பின்பா லுள்ளான்
மழவிளங் குகனை யன்பால் வாழ்த்தியே வணங்கிப் பின்னர்
எழிலுறு சண்டி பூசை யியன்முறை புரிதல் வேண்டும். (௨௪

ஆதியிற் குடிலை சேர்ந்த வைந்தெழுத் தினாலு மன்பான்
மாதிரம் புகழு மாவா கனமுதல் வாய்ந்த வெல்லாந்
தீதற விலிங்கந் தன்னிற் சிவபுரத் தமர்ந்த தேவைச்
சோதியைப் பூசை செய்து துதித்திடல் வேண்டு மன்றே. (௨௫

உருத்திர மனுவி னாலு மோங்கிய வபிடே கந்தா
னருத்தியிற் செய்க வாவின் பாலொடு தயிரா னெய்யாற்
கருத்துறு தேனாற் காம ரெலுமிச்சங் கனியின் சாற்றாற்
றிருத்துறு கலவை யாலு மஞ்சனஞ் செய்தல் வேண்டும் (௨௬

வேறு

சுத்தநீ ராலு மபிடேகஞ் செய வேண்டுஞ் சுகந்த மான
வுத்தம வெண்பட் டாடை யுடுத்துக்கந் தத்துவா ரேயா
மித்திருயந் திரத்தி னாலே யிலிங்கமீது சந்தம் பூசி
மெத்துவில்வ பத்திரத்தான் முண்டகத்தாற் பூசை செய்க. (௨௭

வேறு

கொன்றையூ மத்தம் பூவாற் குலவுறு மெருக்கம் பூவா
லொன்றிய வன்பி னாலே யருச்சனை யுவந்து செய்க
கொன்றையந் தணனைக் கொன்ற கொடும்பவம் போக்கு நீலந்
தூன்றிய கள்ளுண் பாவந் தொலைத்திடு மென்ப மன்னோ. (௨௮

ஊனமி லூமத் தம்பூக் குருகிந்தை யொழிக்கும் யாவு
மாகலந் திகழுங் கொன்றை மலர்கொடு பூசை செய்தோன்
வானவர் பெருமான் றேவி யிருவரு மகிழ்ச்சி கொள்வ
ரானதா லிதழி கொண்டே யருச்சனை புரிவர் நல்லோர். (௨௯)

பன்னரும் வில்வ மாதி பன்மலர் பணிந்து சாத்திச்
சொன்னநல் லுணவு மூட்டிச் சாமரை சிவிறி யாதி
யென்னுநல் லுபசா ரங்க ளினிமையிற் செய்து நாதன்
முன்னுற நின்று வேத தோத்திர மொழிய வேண்டும். (௯௦)

இன்னண மோர்கா லேனு மின்புடன் பூசை செய்தோன்
பன்னரும் போக மூழ்கிப் பன்மகப் பேறு வாய்ந்து
பன்னெடுந் தேச மெங்கும் பரந்துள கீர்த்தி யெய்தே
யென்னரும் புகழ்ந்து போற்ற விரும்புவி வாழ்வ னன்றே (௯௧)

எத்தலத் துறைவா னேனுஞ் சாருப மெய்தி வாழ்வான்
பத்திசே ரனித்த பூசை பற்பல பொருளு மாக்கும்
நித்திய மடியிற் சேர்க்கு நிமலனார் பூசை சொன்னோம்
அத்தனைத் திருநெல் வாயி லரன்றனைப் பூசை செய்மின். (௯௨)

புந்தியின் மகிழ்ச்சி பொங்கப் புதுமதி மிலைச்சி னானை
வந்தனை செய்பி னானும் வளர்வதோர் பிறவி நீக்கி
யந்தமில் கருணையாள னாருள் செய்வா னென்று
பந்தமில் சூத மேலோன் பகர்ந்தனன் முனிவ ருக்கே. (௯௩)

சிவலிங்க பூசா விதிப்படல முற்றிற்று.

ஆக செய்யுள் ௬௫௩

---

I

# தேவி பூசாவிதிப்படலம்



அருமறை முதலே போற்றி யம்மையோர் பாகா போற்றி
கருதரும் பாத பூசை கமலமா மிதயந் தன்னிற்
புரிதரு பத்த ராேனோர் போற்றிட வருள்வாய் போற்றி
விரிபுகழ்த் திருநெல் வாயில் விமலனே போற்றி போற்றி. (௧)

விரிதரு வேத வாக்கை விளக்கிய புராண காதை
பரிவுடன் வியாச மேலோன் பகர்ந்திட வுணர்ந்த சூத
வரியயன் வானோ ரேத்த வமர்ந் தருள் சிவபுரேசன்
வரமுறு பூசை தானும் வகையிரண் டென்றாய் நீயே. [௨]

மலர்மண மெனவு மேலா மணியொளி யெனவும் வல்லோர்
பலர்புகழ் பெருமான் பாகம் பிரிந்திடா துறையு மாதை
யலர்கொடு பூசை செய்யு மரியதோர் விதியு மின்னே
யுலர்தலி லருளி னோடு முரைத்தருள் பெருமை யென்றார். (ரு)

வண்மை சால்வனத்து வேந்தர் வாய்மையிற் சிறந்தார் கேட்ப
வொண்மைசால் மனிதர் தம்மை யுள்ளிய வுடனே நல்லூர்த்
திண்மை சாதேவி பூசைச் சிறந்திடு விதியைச் சொல்வோ
மூண்மைசால் முனிவீர் கேண்மி னென்றெடுத் துரைப்பான் சூதன்.

சொல்லிய விதியின் மூழ்கித் தோமக லியதி முற்றி
மெல்லியல் மாதைக் காயத் திரியெனு மனுவி னாலே
நல்லியன் மலர்கைக் கொண்டு நாடியே பூசை செய்க
வில்லெனின் வேதத் தாதி யியம்புறு மனுவாற் செய்க. (ரு)

வேறு

உரியதொரு மனுவை மொழிந்துயரா வாசனம் புரிந்து
மருவுறுமா சனமமைத்து மன மடங்கிப் பிரியமுட
னருக்கியமும் பாத்தியமு மளித்தபின்ன ரபிடேகம்
புரிவதுடன் கந்தமூன்றும் புகலரிய பஞ்ச கற்பூரம். (சு)

வேறு

குங்குமங் கலந்த நீராற் குலவுற வமைத்த மஞ்சள்
பொங்குசர்க் கரையும் பாலும் புனிதநெய் தேனு மாட்டித்
தங்கிய சுன்னத் தானுந் தலைவியை யாட்டிப் பின்னர்
மங்கலி லருண வேத முடிமனு வதனு லாட்டே. (எ)

பணிதிகழ் பொற்பட் டாடை பாங்குற வணிந்து பின்ன
ரணிதிகழ் கலவை சாத்தி யகிலமும் பெற்ற தாயை
மணிதிகழ் கழுநீர் வாச மல்லிகை முல்லை வில்வங்
கணிதமில் மலர்க ளானுங் கற்பக நறும்பூ வானும். (அ)

கந்தியா வர்த்தந் தாழை ஞாழலே யலரி வெட்சி
முந்திய செருந்தி வேங்கை மாமலர் கன்னி காரங்
கந்தமார் கடுக்கை காஞ்சி கடம்பெருக் கழிஞ்சில் கோட்டங்
கொந்தவி ழசோகு பன்னீர் குராமலர் வெள்ளி லோத்தம். (கூ)

இன்னபன் மலர்க ளாலே யிறைவியாங் கனக வல்லி
யென்னுமம் பிகையி னும மாயிர மெடுத்துச் சொல்லித்
துன்னிய வன்பி னோடு துகளறு பூசை செய்க
மன்னிய மனுவைச் சொல்லி நிவ்வதன மரபிற் செய்க. (௧0)

கந்தமே கமழுந் தூபங் காண்வரு தீப மாதி
வந்தவை களிப்ப வம்மை வரிசையா னுதவி யேலஞ்
சந்தமார் பூக நற்காய் சார்ந்ததாம் பூல மார்த்திப்
பந்தமி றேவி சூக்தப் பகர்மனு வினானும் பின்னர். (௧௧)

காந்திமந் திரத்தா லன்பிற் றலைவியைத் துதித்தல் வேண்டு
மேந்திய விரைத்தேம் புட்பாஞ் சலிதனை யினிது செய்க
வாய்ந்திடு துதிகள் கூறி மகிழ்ந்திடச் செய்து புத்தி
யாய்ந்திடு தியானத் தோடு மாயிடை வலமாய் வந்து. (௧௨)

இத்திறத் தியைவ செய்தே யிறைவியை வணங்கி யேத்திப்
பத்திமைத் திறத்தி னாலே மன்னிப்பும் பகரல் வேண்டுஞ்
சித்தியை யளிக்கு மெங்க டேவியின் பூசை யீதே
புத்தியு முத்தி தானும் போற்றிடி னளிக்கு மன்றே. (௧௩)

வித்தையு மளிக்கு மாந்தர் விரும்பிய யாவு மீயும்
வித்தக நிலைய ராயின் விளம்பிய குடிலை யாலுஞ்
சத்தியைப் பூசை செய்க வன்றெனிற் சத்திக் கான
வுத்தம வைந்தெ ழுத்தா லுபர்வுறு பூசை செய்க. (௧௪)

தேவியின் மனுவாங் காயத் திரியுமாம் பூசை செய்ய
வாவியி னுவி யாகி யமர்தருந் தேவி தன்னை
யேவரும் பூசை செய்தே யின்புடன் வாழ்க வீது
தேவரு மேத்து மம்மை திகழ்வெளிப் பூசை யாமே. (௧௫)

திகழ்வெளிப் பூசை தன்னைச் செய்பவ ரேவ ரென்னின்
மகிழ்வுட னகத்திற் பூசை செய்திட வலிமை யில்லார்
புகழ்ந்திடு சுவானு பூதிப் பேற்றினை யளிக்கு மந்த
விகழ்விலா வகத்திற் பூசை யியற்றிடு முறையுஞ் சொல்வோம். (௧௬)

கூட்டிய சரீர மாகிக் குலவுறு பிண்டந் தன்னி
னூட்டிய விதய மீது நலந்தரு மிதழ்க ளெட்டா
யீட்டிய துகள்க ளின்றிக் கேசர மிலங்கா நிற்பப்
பாட்டியற் கமலந் தன்னைப் பாவனைபுரிந்து நாப்பண். (கஎ)

பொருட்டினி லிவர்ந்த சோதி பூரண மாகி நுண்மை
தருமொரு மறைவா யுள்ள துவாரத்தைத் தனியே யெண்ணி
வருத்திடு துவாரத் துள்ளே வன்னியை வதன மெங்கு
மிகுத்ததாய்க் கதிர்கள் கான்று விளங்குறு மேனி யாக. (கஅ)

நிலையினை யுடைய தாக நினைந்திட வேண்டு நாப்ப
ணலைதலில் சுவாலை யாகி யணுவுமாய் நூலே போல
விலகுவ தாகி நீருண் ணொழிவியி னடுவே நின்று
குலவுறு கதிர்கால் மின்னற் கொடியென விளங்கிப் பின்னும். (க௯)

அதனொரு நுனியின் கோணத் தமர்பவ ளாகி ஞான
விதமுறு கலையாய்ச் சத்தாய் விளங்குமீ சுவரி யாகிக்
கதிதரு சித்து மாகிக் கரையிலா வின்பா யெங்கும்
வதிதரு நிறைவாய் ஞான வடிவமுந் தானே யாகி. (௨0)

அகவிரு டொப்ப தாயு மம்பொனி னுருவ மாயு
முகுமொரு நெல்லின் வால்சேர் நுனியெனு முருவ மாயு
மிகுமதி வலிமை மேவு மாந்தர்க ணீண்ட காலந்
தகுநிலை தருவ தாயுந் தீயினைத் தியானஞ் செய்க. (௨க)

கற்பனை கடந்து நின்று கருணையே வடிவ மான
சிற்பரைச் செல்வி தன்னைச் சிவையெனுஞ் சுவண மாதைப்
பொற்புறு பொறியை வாட்டிப் போவதோர் பிராண வாயு
நிற்பவே யடக்கிப் பின்னர் நிலையுறு மனத்தாற் பாரே. (௨௨)

பிரமனு மவளே யாவள் பீடியல் சிவனே மாலை
பரவிய வுலகம் வண்ணி பார்முத லவளே யென்பர்
வரமுறும் யோக மார்க்கர் மனத்தினை வென்ற வீரர்
பிரமமுஞ் சார்ங்க பாணிப் பெயருறு தெய்வ மாயும். (௨௩)

உள்ளுறை தெய்வ மாயு மொழிவிலா திருப்பா ளாயுங்
கள்ளவைம் பொறியால் வாக்காற் காருறு மனத்தால் வேறுற்
றெள்ளிதி னறிய வாராத் தேவிய னுடையா ளாக
உள்ளுவர் வணங்கி வாழ்த்தி யொருநெறி நிற்பார் மன்னோ. (உச)

கனகமா வல்லி பாதங் காண்பரே லோர்கா லேனு
மனகமா மனத்தா லாய்ந்து தியானமுஞ் செய்தா னென்னோ
ரினமுறு கோடி சென்மத் தியற்றிய பாவ நீங்கு
மனிதருக் கழிதலில்லா வானந்தம் வழங்கு மன்னோ. (உரு)

இருந்துணர் யோகிக் கேனு மெய்தவும் படுமோ நாளும்
பொருந்திய பூசை யில்லை புகலுமுத் திரையு மில்லை
திருந்திய வொழுக்க மில்லை திரவியச் சேர்க்கை யில்லை
மருந்தெனு மனுசந் தான மாத்திர முத்திக் கேது. (உசா)

மானத யாகம் போல மற்றொரு பூசை யில்லை
தேனலர் கொன்றை மாலை திகழ்சிர மணிந்தோன் பூசை
மானதங் கோடி பங்கு வளர்ந்திடு மதிக மாகி
யானதா லனுசந் தான மரிதினு மரிதே யாகும். (உஎ)

முல்லைவெண் ணகையுஞ் செவ்வாய் முகிழிள முலையுங் கொண்ட
வெல்லையில் சுவண மாதை யிதயமாங் கமலந் தன்னில்
வல்லவர் பூசை செய்யு மரபிது வேறு மொன்று
நல்லவர் செய்வ தாகு நவினுது மதனை யின்னே. (உஅ)

இதயமாங் கமலந் தன்னி லிறைவியை யிருத்திக் கோடி
மதியெனு மொளியும் பாதி மதியணி முடியு நான்கு
துதிபெறு தோளு நீண்ட திருக்கணுந் துலங்கா நிற்பப்
புதியமா ணிக்க மாலை புனைந்தொளி பரப்பா நிற்ப. (உகு)

செழுஞ்சுடர்க் கிரீட மன்னுஞ் சென்னியுந் திரண்டு விம்மி
யெழுந்துயர் தனமு மேலா யிலங்குறு வரத மன்றி
யழுங்குறு மாங்கை தீர்க்கு மடயமே யக்க மாலை
கொழுஞ்சுடர் தருகண் ணுடி குலவுறுங் காங்க ணுங்கும். (௩0)

ஈங்கிது வன்றிக் கஞ்ச மேருறு மபயந் தானு
மோங்கிய வரதம் வாய்ந்த வுயர்திருக் கரமுஞ் சால
வீங்கிய நிதம்ப மோடு வளைதரு நுசுப்பும் வேறாய்த்
தேங்கிய தோளும் ஞானத் திருவடி வாகி மேலாய். (௫௧)

விளங்குறத் தியானஞ் செய்து வியலுறு அபிசே காதிக்
களங்கமி லுபசா ரத்தாற் கனகமா வல்லி தன்னை
யுளங்கொளு மன்பி னாலே யுயர்தரு பூசை செய்க
வளங்கனி செல்வ மாக்கும் வான்முதற் பேறு மாக்கும். (௫௨)

புகரற வகத்தே செய்யும் பூசனை யிதுவே யாகும்
நிகரறு ஞான நல்கு நீடிய கல்வி யுண்டாம்
பகருது மின்னு மொன்று பழையதோர் கதையு மாகுந்
தகவுறு முனிவீ ரென்று சாற்றுவன் மேலுஞ் சூதன். (௫௩)

முன்னொரு ஞான்று வானோர் முதுவனின் மைந்த னானோன்
நன்னரேய் தவத்தோர் செம்ம னாத முனிவ னென்பான்
மன்னுறு வித்தை வேட்டுப் படைப்பவன் றன்னை நோக்கி
நின்னிடம் வித்தை யெல்லா நினைவுடன் முன்னர்க் கேட்டேன். ()

அன்னநல் வித்தை யெல்லா மயர்த்தன னினியென் செய்வேன்
பன்னுதி வருமா றென்னை பகவனே யுலக நாதா
வென்னலுங் கணமொன் றாராய்ந் தியம்புவன் மைந்த நீகேள்
அன்னையை யொருபாற் கொண்ட வண்ணலா ருறையுந் தானம். ()

மண்ணிடை யுள்ள தொன்றே மற்றது திருநெல் வாயில்
கண்ணுதற் றாணு வீசன் கனைகழற் பூசை செய்து
நண்ணினேன் படைக்கு மாற்ற லுமக டனையும் பெற்றேன்
புண்ணியத் தலமா மாங்கே போகுவாய் நீயு மென்றான். (௫௬)

தந்தைசொற் படியே யன்னான் றகுசிவ புரத்திற் சென்று
சிந்துவா மதனிற் றோய்ந்து தீர்த்தமு மாச மித்துச்
சிந்தையிற் றியானஞ் செய்தான் றேவியை யீசன் றன்னை
வந்தன னொருவன் மாணி பத்திர முனிவன் மாதோ. (௫௭)

ஆயிடை யிருந்தான் றன்னை யையநீ மெலிந்தா யென்னப்
பாயநுண் மதிசால் மாணி பத்திர முனிவா வீண்டு
நாயனைப் பூசை செய்ய நாடிவந் துள்ளே னுக்கு
மேயதோர் குறையு முண்டு மென்மல ரளிக ளுண்ணும். (௩௮)

அளியுணு மலர்க ளில்லை யாதலிற் றுயர முள்ளேன்
எளியனேன் செய்வ தென்னோ வென்றனு மதனைக் கேட்டான்
அளியுடை முனிவ நீயு மழுங்கலை சுவர்க்கஞ் சென்று
தெளிவுறு பூசைக் கான திப்பிய மலர்கள் கொய்து. (௩௯)

நித்தியந் தருவே னென்று நியமமாய்க் கொடுக்க வாங்கிப்
பத்தியிற் பூசை செய்தான் பசும்பொனி னிறத்த வாகி
மெத்திய கந்தம் வீசி மேன்மைகொண் மலர்க ளாலே
சித்தமு மகிழ்ந்து தேவி திருவுருத் தோன்ற நின்றாள் (௪0)

நற்றவன் பூசை யாலே நாதனு மகிழ்ந்து தோன்றப்
பொற்புறு மிருவர் பாதப் பொன்மலர் வணங்கிப் போற்றி
யற்றமில் வித்தை யெல்லா மருள்செய வேண்டு மென்று
மற்றவன் வரந்தான் கேட்ப வள்ளலு முமையு மீந்தார். (௪௧)

அந்தமில் வித்தை யெல்லா மளித்திடப் பெற்று மேலோன்
முந்துபே ருவகை கொண்டு மூதெயிற் றிருநெல் வாயி
லெந்தையை யாயை யன்பா லிறைஞ்சினன் விடையும் பெற்றுச்
சிந்தையை யவர்பால் வைத்துச் சென்றன னூர தன்றான். (௪௨)

உவணையா முலகினின்று மொருமுனி யுவந்து தந்த
சுவணமா மலராற் பூசை செய்ததோர் காரணத்தா
லவனுறை முனிவ ரெல்லா மன்பினிற் புகழ்ந்து போற்றிச்
சுவணமா வல்லி யென்று செப்பினர் தேவி நாமம். (௪௩)

வித்தையின் முதல்வி யென்றும் விளம்பினர் முனிவர் சில்லோர்
இத்தகு சுவண வல்லி யிணையடிப் பூசை செய்யும்
வித்தகர்க் கரிய தொன்று மேதினி தன்னி லுண்டோ
வித்தியே சுவரி யான விமலையைக் கனக மாதை. (௪௪)

இயம்பிய விதியி னாலே யாவரும் பூசை செய்யின்
செயம்பெறு பிரம வித்தை சேர்ந்திடுந் தரணி மீதே
பயன்பெறு திருநெல் வாயிற் பதியினைப் போல்வ தில்லை
நயம்பெறு கிருபா சிந்து நிகர்வது நாடி னன்றாம். (ச௮)

தாயினு மினிய தேவி தனையெவர் நிகர்ப்பார் சிந்தை
யாய்தரி னுச்சி நாதன் போல்பவ ரரிய ரம்மா
பாய்தரு கருணை மாதின் பூசையைப் பகர்ந்தோ மின்னு
நேயமார் வசிட்டன் சோக நீங்கிய கதையுஞ் சொல்வாம். (சகூ)

தேவி பூசா விதிப்படல முற்றிற்று.

ஆக செய்யுள் ச०உ

---

# வசிட்டன் புத்திரசோக நீங்கிய படலம்

---

திருநந்தி கணங்கள் காப்பச் சிவபுரத் துறைவாய் போற்றி
க நரந்தி யுயிர்க ளெல்லாங் கதியுறத் தீர்த்த மானாய்
திருவந்த மூர்த்தி யாகிச் சிறந்திடு தலமு மானாய்
வெருவந்த வசிட்டன் சோகம் வீட்டிய முதலே போற்றி. (க)

முன்னொரு வேலை தன்னின் முழுதுல களிக்கும் வேந்தன்
மன்னிய செல்வ முள்ளான் மாதவக் காதி மைந்தன்
பன்னிய விசுவா மித்ரன் பாரினை யாள்வோன் ஞானந்
துன்னிய வசிட்ட னென்னுந் தோன்றலை யடைந்தான் மன்னோ. ()

தேனுவின் பொருட்டு வேதத் தெய்வமா முனிவ னோடு
வானவ ரஞ்சு மாறு வலியினிற் பெருயபோ ராற்றி
யானினை வலிதிற் கொள்ள வன்னது கண்டு சீறிக்
கானமர் வாழ்க்கை யானுங் கடுகியே யுரப்ப லோடும். [ங]

காதியின் புதல்வன் சேனை கடிதினி லழியா நிற்ப
நீதிமன் வலிமை சீசீ யென்றென நினைந்து நோற்று

மாதொரு பாகன் றன்னை வணங்கின னருளும் பெற்றுப்
பேதியாப் படையும் பெற்றுப் பெரியவன் வனத்தை நீற்றி. [௪]

மழைத்துளி யுண்ணும் புட்போல் வளர்தவ நோக்கு வானுந்
தழைத்துள சினத்த னாகித் தண்டமொன் றெடுத்து மன்னன்
செழித்துள படையை யெல்லாஞ் செவ்விய தண்டிற் கொண்டான்
பிழைத்தவன் காதி மைந்தன் பெருஞ்சினங்கொண்டான் மன்னே.

மாதவ வசிட்டன் பெற்ற மைந்தரா னோர்க்கு மன்னன்
மேதகு சாபங் கூற மாய்ந்தன ரொருங்கே யாரும்
ஆதவ னுதித்த காலை யாரிருண் மாய்ந்தா லென்னச்
சாதலை யுணர்ந்து தந்தை தவமுனி துன்பத் தாழ்ந்தான். [௫]

வேதநா லுணர்ச்சி யெங்கே விளம்புமா றங்க மெங்கே
சாதன மெங்கே வேறுந் தத்துவ ஞான மெங்கே
போதமெய்ஞ் ஞான மெங்கே புண்ணிய மெங்கே யீசன்
பாதமெய்ப் பூசை யெங்கே பத்திமை யெங்கே யந்தோ. [௭]

புத்திர சோகம் வந்தாற் பொன்றுமே யிவைக ளெல்லா
மத்திர வாக்கா னோர்ந்த வல்லனுக் கெல்லை யுண்டோ
முத்தனே மயங்கி னேனென் மேதினி வாழ்க்கை பேணும்
பெத்தனி னிலைமை தானும் பேசலாந் தகைய தாமோ. [அ]

ஆதித்தன் குலத்தில் வந்தார்க் கருங்குரு புலம்பிச் சொல்வான்
போதித்த வென்னை நீங்கிப் போயினீர் புதல்விர் நீரே
சோதித்த தவத்தி னானுஞ் சொலற்கரும் விரதத் தாலும்
பேதித்த லின்றி யென்பாற் பெட்புறு புதல்வ ரானீர். [௯]

தேனுவின் பாலை யுண்டு தெவிட்டியே வளர்ந்தீ ருங்கண்
மானமார் தவந்தா னெங்கே மன்னிய பெருமை யெங்கே
யீனனோர் சாப மிட்டா னெரிந்துநீர் நீறு பட்ட
ரூனமே லொன்று மில்லா வும்மைநான் வயிற்றில் வைத்தேன். []

வைத்தவென் வயிற்றின் கண்ணே வளர்வதோ சோகத் தீயுங்
கைத்தலில் பிதாவென் பானுங் கடப்பனோ சோகந் தன்னைப்

பித்துறு நெஞ்சி னுள்ளே பெரியதோர் வனத்தி னூடு
யத்தரோ நீங்க டாமு மாயிடை யிருந்து கொண்மேர். [கக]

எத்துணை வருத்த மின்றி யேழைய னேனைந் தோ
நித்திய நியமங் கொண்டோர் நெடுஞ்சடை யமருங் கொண்மேர்
உத்தம பவித்தி ரந்தா னுயர்விர லணிந்தி ராத
வைத்துமைக் கண்ட கண்ணால் வளர்பசி தாகங் காணேன். (கஉ)

நூற்றுவர் வசிட்டன் மைந்தர் நோற்றவ ருள்ளா ரென்று
மாற்றரும் வெகுளி பொங்க மலரய னழுக்கா றுற்றான்
போற்றருஞ் செல்வம் யாது பொருட்டினை யவற்கென் செய்தேன்
சாற்றரு மரசர் மன்றிற் சமமுளா ருளரோ வென்று (கங)

என்னையே மதித்தே னிப்போ தெரியுண்ட புதல்வ ருள்ளீன்
முன்னையி னெண்ண னிற்பேன் முற்றிழை மனையென் சொல்வாள்
மன்னிய சோகக் கண்ணீர் மடைதிறந் தோடு மந்தோ
வென்னுடை யிதயந் தன்னி லிருந்திடு சோகத் தீயா. (கச)

ஆழியி னீரை யுண்ணும் வடவையா மனலே போன்று
வாழிய விவேக நீரை வற்றிடச் செய்யு மென்றால்
வீழிய கமலம் போல விளங்கிய முகத்தைக் காணே
னூழெனும் விதியே யாது முயிருடன் வாழ்வ தென்னே. (கரு)

புண்ணியப் பேறு வாய்ந்த பொருவிலா முனிவர் பல்லோர்
நண்ணினர் புதல்வர் தம்மை நாளுடன் வாழ்கின் றாரே
யெண்ணியென் றலையிற் றானே யேற்றினா னிடையு றெல்லாந்
தண்ணிய கமல மான தவிசுறை கடவு ளானே. (கசு)

வழிபட வந்த தென்ன விரதத்தால் வந்த தென்ன
தழுவிய தவத்தா லான தருபல னென்ன வென்றும்
வழுவற வியற்றப் பட்டு வருபயன் கண்டே னந்தோ
பழிபட மலையின் வீழ்வேன் படர்தருந் தீயிற் பாய்வேன். (கஎ)

ஆருயிர் விடுவ தன்றி யையகோ செய்வ தென்னே
பேருடன் மகர மீன்கள் பேசிய வசிட்ட னென்று

சேருடைத் தலைவர் இன்று செறிதிரைக் கடலில் வீழ்ந்தாற்
சீருறு பாசங் கொண்டு சிறந்திடு சமனுங் கட்டான். (௧௮)

பூமியி லுடலைப் போக்கும் புறநெறி யெனக்குண் டாமோ
ஆமெனி னினை நீங்கி யடைகுவே னைந்தர் சென்ற
ஏழுறு முலகந் தன்னை யிருந்துநா னாழ மாட்டேன்
காழுறு பற்றை யார்வங் கடிந்திய செற்ற மில்லேன். (௧௯)

ஒல்லையீ ருலக மஞ்ச மொருபற்று மின்றி நீத்தார்
சொல்லுறி னுருகு செம்பொ னொப்பரென் றுரைப்ப ரன்றி
நல்லதோர் தவத்தின் மாண்பா லுடைய வன்னி யொப்பர்
வல்லமை யுடையர் பொய்யா வாய்மையா லேவ ரொப்பார். (௨0)

வனத்தமர் சிங்க வேறு வளர்மருப் பானை தன்னை
வினைத்துடன் கொல்லப் பட்டா லென்னவே மைந்தர் யாரு
மனத்திடைச் சினமேற் கொண்ட மன்னவர் மன்ன னாலே
வனத்திடை யெரிக்கப் பட்டார் வருவரோ வின்னு மோர்கால் ()

சிந்தையை யெரித்து நிற்குஞ் சிறிய சோகத் தீயு
மைந்தரைக் கொன்றோ னான மன்னனை யெரியா தென்றால்
விந்தையின் விந்தை யீது வீறுசே ரெனக்கு மந்தோ
வந்ததே யிதற்கென் செய்வேன் வகையொன்று மறியே னந்தோ.

வேறு

வசிட்டனெனும் பெயரெங்கே மலரயன் மகன்மை யெங்கே
விசிட்டமெனும் புண்ணியத்தின் விறெங்கே யென்னுடைய
கசிவுடைய முனீந்திரனுங் கடமையெங்கே புத்திரமாய்
வசிப்பதெங்கே வந்தபழி மாறுவது முளதாமோ. (௨௩)

வேறு

இப்படிப் புலம்பி யன்று னேங்கினன் புரண்டா னெந்தான்
இப்படி யிலகன் போல்வார் யாவரோ விதியி தென்றான்
செப்புவ தென்றோ மேலோன் சிரத்தினில் வயிற்றில் வாயில்
அப்பினை யென்று சொல்லி யறைந்தனை னோல மிட்டான். (௨௪)

வேறு

தேசமெங்கு நாடெங்குந் திசையெங்குந் திரிந்தழுது
பாசமுற்ற வுன்மத்தன் பயித்தியன்போல் வசிட்டமுனி
வாசநன்னீர்க் கங்கைநதி வாணிவை தாணிநதி
நாசமில்லா முகரிநதி நறும்பெண்ணை நதியின் மூழ்கி. (உரு)

பத்தியொடு குளங்களிலும் பலமுறைபோய் முழுகிப்பின்
நித்தனுறை தளிகளிலு நெடுங்காடு களிலுஞ்சென்
றெத்திறமுஞ் சோகமதற் கெல்லையின்றி வசிட்டமுனி
யத்தனுறை சிதம்பரமா மரும்பதியை யடைந்தனனே. (உசு)

ஆங்கணைகித் திருநடங்கண் டரிதினீங்கிச் சிவபுரமாம்
பாங்குடைய திருநெல்வாயிற் பதியடையச் சோகவெந்தீத்
தீங்ககன்று நீரில்வீழ் செந்தீப்போற் சாந்தமாக
வோங்கியதோர் வியப்பெய்தி யுறுதவனு மியம்புவான். (உஎ)

வேறு

புத்திர சோகம் வந்து புந்தியி னுழைந்து கொண்டு
மித்திர பேதஞ் செய்து மென்மரத் தீயே போல
நித்தமும் வருத்தா நிற்ப நிலையிலேன் வரனு மீங்கே
யுத்தம சாந்தி வந்தென் னுளத்திடைப் புகுந்த தென்னே. (உஅ)

துன்பமுந் தாபந் தானுந் தொலைந்திட வுணர்வுந் தோன்ற
வின்பெனுங் கடலின் மூழ்கி யிருக்கின்றே னியதி யான
கன்மமுந் தவமுஞ் செய்யக் கடிமனந் தூண்டி நிற்குங்
கொன்பயின் மரணந் தானுங் கொம்மெனக் கனவே போலும். ()

சங்கர னீசன் சம்பு சதாசிவன் பகவ னென்னு
மங்கண னும்ம மெல்லா மன்புடன் வாயிற் றோன்று
மெங்கனு மெனக்கு முன்ன ரியன்மறை மனுவுந் தோன்றுஞ்
சிங்கலில் பிரம தண்டந் திகழ்வதே யென்பால் வந்து. (௩0)

புதுமையிற் புதுமை யாகும் புந்தியில் வியப்பு மாகு
மதியணி வேணி யான்றன் மகிமையீங் குள்ள தென்று

மதியினு லாய்ந்து கொள்வேன் மகிமையீங் கில்லை யென்றுற்
பதிதரு சோகத் தீயின் பண்பெலா மொழியா தன்றே. (ருக)

தொல்லைநல் லுணர்வு வந்து தோன்றலாற் றேவன் றேவி
யல்லலை யகற்று மாற்று லாயருண் மேனி கொண்டு
மல்லலம் பதியா மிங்கு மன்னுத றிண்ண மென்றான்
நல்லவர் தொழுது போற்று நான்மறை வசிட்ட னென்பான். ()

விண்ணினை யளந்தா லென்ன விளங்குகோ புரமு மான்ற
மண்ணவர் வியந்து கூறு மதிலொடு மணியாற் செய்து
கண்ணிமை காக்கு மாறு கணங்களாற் காவல் செய்யுந்
திண்ணையு முடைய தேவ தலத்தினைக் கண்ணுற் கண்டான். ()

தண்ணிய கிளைமூன் றாகித் தழைத்ததோர் தருவாம் வில்வப்
புண்ணிய வடியின் கீழே பொலிவுற விருப்போர் பூதி
யண்ணல்கண் மணியும் பூண்டோ ரழகுறு மேனி வாய்ந்தோர்
கண்ணிய முனிவர் தம்மைக் கண்பெறு பயனுற் கண்டான். (ருச)

பெரும்பொரு ளீயு மாந்தர் பெயரெனப் பரந்து தோன்றி
விரும்புறு கமலத் தோடு விரைமலர்க் குவளை பூத்து
விருந்திடு மாந்தர் கண்போல் விளங்கெழின் மிகுந்து பாவ
மருந்தெனுந் தீர்த்தந் தன்னை மாமுனி மகிழ்ந்து கண்டான். (ருரு)

பேரிகை யொலியே காளப் பேரொலி வேத கீதம்
வாரிசை மதங்க வோசை வளர்செவி புகுதக் கேட்டான்
ஏரிசை வடிவ மெங்கு மெழுதரு புளகம் போர்ப்பப்
பேரிசை முனிவ னன்னோன் பெருவியப் பெய்தி நின்றான். (ருசா)

அன்புநீ ராறு பாய வரகர வென்று கூவி
யென்பெலா முருகு நீ ரிறைஞ்சினன் மண்மேல் வீழ்ந்து
பின்பொரு வகையி னீங்கிப் பெருங்கடற் றீர்த்த மூழ்கி
யின்பமே வடிவ மானு னேதமு மொருங்கு மாய. (ருஎ)

பொன்னியல் மனுவை யெண்ணிப் புண்ணிய தீர்த்த மாகி
மன்னிய புகழி னேங்கு மானத வாவி தன்னிற்

றுன்னிமூழ் கன்னம் போலத் தொடக்கற முழுகித் தூயன்
மின்னிய கடலிற் றேன்றும் வெண்மதி யெனமெ ழுந்தான். ()

தடங்கரை யிருந்து தூய தனிமனுச் செபித்துத் தொல்லை
மடங்கரை நியதி முற்றி மங்கள வடிவ மாகி
யிடம்படு புவியி லுள்ள வேலைசட் கிரங்கிக் காக்கு
நடம்பயில் சிவபு ரேச நாதனை யுமையைக் கண்டான். (௩௯)

சிவபுரத் தரசே போற்றி சிவையமர் பாகா போற்றி
பவவிரு ளகற்ற வந்த பரவொளிப் பிழம்பே போற்றி
தவமுனி கபில னுக்குத் தண்ணருள் புரிந்தாய் போற்றி
நவவடி வான வெங்க ணாதனே போற்றி போற்றி. (௪0)

நந்திதன் கணங்கள் காக்கு நலந்திக ழொளியே போற்றி
தந்தியின் முகத்த னோடுஞ் சண்முகப் பெருமா னோடு
மெந்தைநீ யிருந்த கோல மென்னிரு கண்ணாற் கண்டேன்
சிந்தின யெனது சோகஞ் சிவபுரத் தானே போற்றி. (௪௧)

என்றவ னன்பிற் போற்றி யிறையவன் கமல பாத
மொன்றிய மார்பிற் கண்ணி லுயர்நெடுந் தோளிற் சென்னி
யென்றிடு மிடத்தி லொற்றி யிறங்கிடத் தழுவி நாதன்
வென்றபே ரொளியி னாலே விமலனு மானே னென்றான். (௪௨)

தாவிலா முனிவ நீயுந் தவவனஞ் செல்க வென்று
மேவருந் திருவாக் கொன்று மேலிடத் தெழுதல் கேட்டுக்
காவளர் திருநெல் வாயிற் கற்பகப் பிரானைத் தேவ
ரேவருந் துதிக்க நின்ற விறைவனைப் போற்று கின்றான். (௪௩)

பகவனே யீசா போற்றி பங்கயற் கரியாய் போற்றி
சகமுறு பொருளுக் கெல்லாந் தந்தையே போற்றி போற்றி
யகமுறு தியானத் தூறு மமுதமே தேனே யுன்றன்
மகிமையை யுணர்வோர் யாவர் மன்னிய நின்னை யல்லால். (௪௪)

உத்தமத் திருநெல் வாயி லொண்பதி யடியொன் றேனும்
வைத்திடி னதனு லாகு மாண்பய னினைய தென்று

நித்தனே நின்னை யன்றி நெடியவன் வாணி கேள்வன்
சத்திய மறியா னென்றாற் சாற்றுவ தியாது மன்னே. (௪௫)

எங்கணு நிறைந்தாய் நீயே யெங்ஙன மறிவோம் யாங்கள்
பங்கினி லுமையாண் மேவப் படர்சடை மதியஞ் சூடி
யைங்கரன் முருகன் றந்தை யழிவிலாப் பொருளே யானாய்
பொங்கர வணிந்த மூர்த்தி பொருவிலாச் சோதி யானாய் (௪௬)

மனத்தினா னினைக்க வொண்ணாய் வாக்கினாற் கூற வொண்ணாய்
தினைத்துணை யன்பு மின்றித் தெரிசனஞ் செய்து நாயேன்
இனைத்தெனக் கூற லாகா வின்பமே யடைந்தே னையர்
நினையினி மறக்க லாமோ நிமலனே போற்றி போற்றி (௪௭)

சிவம்பயி றலத்தை வந்து சேர்ந்தது மடியேன் பாத
மவம்பயி லஞ்ஞா னத்தா லாந்துயர்த் தலைமி தித்த
டவந்தப வுண்மை ஞானம் பாலிப்பாய் கனக வல்லி
யுவந்திடத் தமர ஞான வொளிமய வுடனாய் வந்தே. (௪௮)

கருணையங் கடலை நோக்கிக் கனிதரு பத்தி யோடு
மருளறு வசிட்ட னானோன் மற்றிது வேண்ட நாதன்
மருவனு பூதி ஞான மன்னுமுத் திரையைக் காட்டத்
திருவருண் மயமாய் நின்ற செய்தவ முனிவன் கண்டான். (௪௯)

நின்றவ னையா நின்ற னீண்டதோர் கருணை யாலே
நன்றிவண் யாவும் பெற்றே னடுவ தென்னோ வென்று
வென்றசீர்க் கமல பாதம் வணங்கினன் விடையுங் கொண்டு
தன்றவ வனத்திற் சென்றான் சாற்றுவ மின்னுங் கேண்மின். ()

மருவினை யகற்றுந் தான மற்றிது போல்வ தில்லை
யொருகண மிருந்தா லங்க ணொப்பிலா ஞான முண்டாந்
திருவளர் தீர்த்தம் போலத் தெய்வமா நதியு மொவ்வாள்
பரமனுங் குற்ற மில்லான் பகர்தலங் குற்ற மில்லை. (௫௧)

அரியயன் மகவான் வானோ ரருச்சனை புரிந்த தாயும்
பரமனுக் கேற்ற தாயும் பகர்தலஞ் சென்று நீவிர்

கருணையங் கடலாந் தீர்த்த முழுகியே கனக வல்லி
மருவிய சிவக்கு ளேத்தி வணங்குமின் சித்தி யுண்டாம். (ருஉ)

கலையொருங் குணர்ந்த ஞானி கனசமா வல்லி பங்கன்
மலைவொருங் ககலு ஞான மன்னுமுத் திரையைக் காட்டத்
தொலைவருஞ் சோக நீங்கித் தொல்வனம் புகுந்த காதை
நலமுற விரித்துச் சொன்னோ நாடுமி னின்னுஞ் சொல்வோம். ()

வசிட்டன் புத்திர சோக நீங்கிய படல முற்றிற்று.

ஆ. செய்யுள் சருரு

---

# விசுக்கிரன் முத்திபெறுபடலம்

பழனமா வேலி சூழ்ந்த பழம்பதி திருநெல் வாயில்
குழகனுந் தேவி தானுங் குவலயங் காக்க வந்த
மழவிளம் புதல்வ ரானை மாமுகன் முருக னென்னு
மழகிய விளைஞ ரோடு மமர்தரு தலமா மன்றே. (க)

தேனென வினிக்குந் தெய்வத் தென்றமிழ் முனிவ னேந்துங்
கானமர் கங்கை நன்னீர்க் கமண்டலம் பொழிந்த பொன்னி
மாநதி காவி ரிடை வளர்தரு பழனஞ் சூழ்ந்து
நானிலம் புகழ்ந்து போற்று நன்மைய தாகு மன்றே. (உ)

அன்னமா தலத்தின் மேன்மை யளவிடற் பால தாமோ
வன்னியை வீட்டில் வைத்தோன் வல்விட மூட்டிக் கொன்றோன்
பன்னிய கள்ளுண் பாவி பாரினை யபக ரித்தோன்
றுன்னுமந் தணனைக் கொன்றோன் றொல்குரு மனைவி தன்னை ()

நாடிய தூர்த்த னின்றோர் நன்னக ரதனைக் கண்டா
னீடிய பழிய கல்வார் நேயமே நன்மை வாய்ந்து
பாடியன் மறையின் மேலும் பரமமா மறைவா யுள்ள
பீடியல் சரித மொன்று பேசுவங் கேட்பீர் மன்னோ. (ங)

வையக மாந்தர் போற்றும் வளம்பதி விசாலை தன்னி
லையர்தங் குலத்தில் வந்தோ னருங்கலை பலவுங் கற்றோன்
உய்யமாற் கருமஞ் செய்வோ னுபர்தரு வேள்வி செய்தோன்
மெய்யதாம் வேள்விக் கெல்லாம் வினைமுத லாகி யுள்ளான். (ரு)

அந்தணர் தொழிலாம் வேள்வி யாற்றுத லாற்று வித்தல்
சந்தநான் மறையை யோத றக்கவர்க் கோது வித்தல்
வந்தவர்க் கீத லேற்றல் வருமுறை திறம்பா வண்ணம்
புந்தியின் மகிழ்ச்சி பூப்பப் புரிதரு செயலி னின்றான். [சு]

மாமறைக் குலத்தோர் மன்னும் விசுக்கிர னென்று போற்றத்
தோமில்சீர் புனைந்த தோன்ற லாயினுந் தொன்மை வாய்ந்து
காமுறு சைவ நீதிக் கண்ணுதற் பரனை யெண்ணா
னேமுற வழிபா டாற்று மிறையவன் விண்டு வென்று [எ]

தனிமுதல் சிவனென் றெண்ணாத் தக்கன்போல ன்ஞன்புத்தி
கனிதலின் றாகி நாளுங் கடுமுர ணெய்தா நிற்பப்
பனிமதி மிலைந்த வேணிப் பகவனை நிந்தை செய்தா
னினியனே யெனினு மீசன் சிவனென வெண்ணு னாகி (அ)

பண்டைவல் வினையி னாலே பரம்பொருள் சிவனோ வெண்பான்
விண்டுவே கடவு ளென்றும் விளம்புவான் மூடர் சில்லோர்
கொண்டனர் குரவ னென்று குலமறை கிளத்தும் வாயிர்
அண்டர்கள் பெருமான் றன்னை யகத்தினிற் றியானஞ் செய்வார்)

தங்கிய கோட்டி சார்ந்து தருசிவ நிந்தை செய்தே
யங்கவர் தம்மை வாதி லல்லன கூறி வென்றுந்
தங்கள்வை கான சந்தான் றவறிலாச் சமய மென்று
மெங்குள சமயத் தாரு மிசையுமா றெடுத்து நாட்டி. (கO)

தான்புகல் மேற்கோ ளுக்குத் தக்கதோ ரேதுக் கூறி
மேன்மைகொ ளெடுத்துக் காட்டும் வெல்வகை புகன்று தன்னை
நான்மறை யங்க மாறு நாடிய தருக்க நூலும்
பான்மையிற் பிறவுந் தேர்ந்த பண்டித னென்பா னன்றே. (கக)

உருத்திரன் பசுவ னீச னுயிரினுக் குயிரா யுள்ளான்
வருத்துறு பிறவி நோய்க்கு மருத்துவ னுமையாள் பங்கன்
பரத்துவப் பொருளே யென்று பாங்குட னுணர்வோன் யாவ
னருத்திகொ ணடுகாக்கு மாசனு மவனே யாவான். (கஉ)

அருங்கலை விஞ்ஞைதன் யாவு மறிந்தவ னினைப்பான் யாங்குப்
பரசிவ நிந்தை செய்யும் பாவியு முளனோ பாவம்
விரவுமத் தேசந் தானும் வன்னியா லழிதல் வேண்டும்
பரவுறு பூதி கண்டி பண்புடன் பூணப் பார்ப்பான். (கங)

இருப்பனே லந்தத் தேசம் யாவர்தம் மாலு மன்றே
விருப்புடன் கீகடம்போல் விலக்கிடப் படுதல் வேண்டு
முருத்திரன் சருவ னீச னுக்கிரன் பவனே தேவன்
கருத்துறு பீம னென்னுங் காரண நாமந் தன்னை. (கச)

நிந்தனை புரிவோன் யாங்க ணிலையுற விருப்பா னன்னார்
வந்தனை செய்யுந் தான மற்றது வேயா னாலும்
பந்தமார் நரக மென்று பகாலு மாமே யையஞ்
சிந்தையிற் கொள்ள வேண்டாந் தெரிதரு கருமமில்லை. (கரு)

புண்ணிய நீறு பூசிப் பொருவகல் கண்டி பூண்டு
கண்ணுதற் பரம னாம கீர்த்தனங் கருது வானேற்
கொண்டிலாப் புலைய னேனுங் குணமுளோர் தொழுது போற்று
மண்டனே யெனவுட் கொண்டாங் கவன்கழல் பூசை செய்வார். ()

மறைபுகல் மிருதி நூல்கண் மறுக்கொணு வாக மங்க
டறைபுகழ் புராணஞ் சாற்றுந் துணிபொரு ளிதுவே யென்று
நிறைதரு மனத்த னாகி நீடிய செங்கோன் மன்ன
னுறைதரு நாட்டி னின்று மோட்டினன் பதகன் றன்னை. (கஎ)

ஓட்டுறு காலை தன்னி லுறுசினை பூணு நூலை
வீட்டியே யோட்டி விட்டான் வேறெவன் செய்வான் மன்னன்
பாட்டிடைப் பரனை யெள்ளிப் பழியொடு பாவஞ் சார
வேட்டைப்பட் டவனென் செய்வா னெங்குமே திரிந்தா னந்தோ ()

விலக்குண்ட மறையோ னான விசுக்கிரப் பெயரி னானைக்
கலக்குண்ட மனத்தர் காணார் கடிநக ரதனி னுள்ள
ரலக்கணால் வருந்திப் பாவி யந்தணர் வீட்டி னல்லாற்
குலக்கணு மிழிந்தார் வாயில் குடிசையில் வசிக்கு நீசர். (௧௯)

என்றிவ ரில்லந் தோறு மிரந்துணுந் தொழில னாகிக்
கன்றிய மனத்தர் தூற்றக் கையினுங் காணு தோடித்
தென்றிசை யதனிற் சென்று திரிதரு பேய்க்கோட் பட்டுக்
குன்றிய மனத்தன் கொன்னே தலைக்குறை கமலத் தன்னை (௨0)

கையினு லள்ளி யுண்பன் கல்லினு ழைவன் யார்க்கு
மெய்யினி லாடை பேணுன் மென்மையிற் சிறுவர் தம்மா
லையவே புடைப்புண் டாவி நனிதளர்ந் தெங்கு மோடிப்
பையுளுக் கெல்லை காணுன் பண்பிலா னென்செய் வானே. (௨௧)

திரிந்தவன் றிருநெல் வாயில் சேர்ந்தொரு குரோச தூரத்
திருந்திராத் திரியிற் பொல்லா வெரியுமிழ் நாகந் தீண்ட
வருந்தியே யுயிரி ழுந்தான் மற்றவன் முன்பு நின்றார்
திருந்திய நமனார் தூதர் சிவகணா ரங்கட் சென்றார். (௨௨)

உலக்கையே பிண்டி பால முயர்கதை பாச மேந்தி
யலக்கணை புரியுந் தூத ரடியனை யடாகொல் லென்று
கலக்கினர் பாசங் கொண்டு கொடியனைக் கட்டும் போது
விலக்கினர் விமான மேற்றி வீரரா நந்தி தூதர். (௨௩)

அணியினை யணிமி னாடை சாத்துமி னலர்பூ மாலை
பணியுடன் றரிமி னென்றார் பனவனுக் கெதிரிற் பல்லோர்
அணியிழை மகளிர் வானத் தரம்பைய ராடல் செய்மின்
றணிவறு காத லோடு சாற்றுமின் பாட லென்றார். (௨௪)

நந்தியெம் மடிகள் போல நமக்கிவர் வணங்கு நீர
ருந்துமின் புடைமின் றூதர்க் கொல்லுமோ விதுதா னென்றார்
சிந்துநீக் கண்ணார் தூதர் செவ்வையாய்ப் பாசம் வீசி
முந்திய வலியி னாலே முயன்றன ரிழுத்தல் காணூஉ. (௨௫)

மிக்குறு கோப மூள முசலமே கதையே வைவேல்
செருக்குள படைகள் வீசித் தூதரைப் பொருது நின்றார்
தக்கபோர் முகூர்த்த மூன்று தாழ்வின்றி நிகழா நிற்ப
வக்கடுந் தூதர் தோல்வி யடைந்தனர் விளம்பு வாரே. (௨௬)

உலகினிற் சான்று மாகி யொடுக்கமு மின்றிச் சந்தா
யிலகுறு சிவனே யன்றோ யாவர்க்கு மிறைவ னாவான்
அலகிலா வலிமை தன்னை யச்சிவ னளிக்கப் பெற்று
நிலவுறு பாவஞ் செய்த நீணிலத் தாரைக் கொல்வோம். (௨௭)

விண்டுவைப் பிரமன் றன்னை வேறுபல் வடிவங் கொண்ட
வண்டரை யெல்லாங் கால னாகிய வடிவா லன்றே
யுண்டிடு தலைநீ ரின்னு முணர்ந்திலீர் போலும் யாங்கள்
விண்டிட விப்போ தேனும் விரும்பினீர் கேட்பீர் மன்றே. (௨அ)

நலங்கிளர் தெற்கே வாழு நடுவனு மீச னேவ
வலங்கிளர் படைக ளோங்கி வந்தனம் யாங்க ளீங்கே
புலங்கிளர் பவமே நாளும் புரிந்தவன் விசுக்ரப் பேரோன்
குலங்கிளர் நரக பூமி கொள்ளுமவன் காணி யாக. (௨௯)

நெற்றியில் விழிதான் கொண்ட நிமலனை நயக்கு நாதம்
பற்றிய நம்போ லீநும் பரமனு லேவப் பட்டீர்
சுற்றிய கணத்தீர் கேண்மின் றுதித்திடு நீறு கண்டி
யற்றயில் சிவனார் பூசை யாதிய நியமத் தாரை. (௩௦)

பொலிவுறு விமான மேற்றிப் போமதி காரங் கொண்டீர்
நலிவுறப் பாவஞ் செய்த நலமிலார் தம்மை நாங்கள்
மெலிவுறப் பாசத் தாலே மேவிடக் கட்டிச் செல்வோம்
வலியுறு மதிகா ரந்தான் வகுத்திட வேறா மன்றோ. (௩௧)

பாவமே நாளுஞ் செய்து பண்பகல் விசுக்ரன் றன்னை
மேவினீர் கொண்டு செல்ல மேலினி யுறுவ தோரீர்
எவரு மச்ச மெய்த விகலுவ தென்னை நீரே
ஆவலோ நந்தி தேவ ரார்சொலோ வொருவர் தம்மை. (௩௨)

அழைக்குமா றேவ வந்தோ வறிந்திலீர் பெரியார் தம்மைப்
பிழைக்குமே யிவனும் பாவி பேதைமை கொண்டு வந்தீர்
உழைக்கரன் பாலே செல்லி னொருகண மெனினு நில்லீர்
பழிக்கவும் படுமே நம்மைப் போன்றவர் பண்பு தானே. (௩௩)

அறிவினாற் பொருந்து மாற்ற லாவன தவறு வண்ணா
நெறிமுறை யியம்பி னோம்யா நேயமில் விசுக்ர னென்பான்
பிறவியிற் சிவம தத்தான் பேணில னகந்தை தன்னா
லறநெறி யொழுக்க மின்றி யகிலமுந் தருவான் றன்னை. (௩௪)

ஈசனைப் பிரபு தன்னை யெவருங் கேட்கு மாறு
நேசமே யின்றி நாளு நிந்தனை புரிந்தா னென்ப
பாசந்தா னகன்ற சோதிப் பரசிவ நிந்தை செய்தார்க்
காசகல் கழுவா யுண்டோ வகல்வது பிறிதா மன்றே. (௩௫)

ஒருமுறை நிந்தை செய்தாற் குளநர கமையா தேனும்
வருமுறை யுடலே நாவே வாயொடு தலையும் வெட்டி
யுருமூறு குலந் தன்னி லொய்யென வேற்ற ருனே
யுரியதோர் கழுவா யாக வுறுத்தினர் முன்னோர் தாமே. (௩௬)

கேட்டவக் காதிற் றீயிற் காய்ந்திடு கோலாற் குத்தல்
வாட்டமில் லானைக் கண்டார் வருந்தவே கண்ணைத் தோண்டல்
வேட்டனர் கழுவாயாக விசித்திர வதையாற் கொல்லல்
கேட்டனர் களித்தாற் கன்றோ கிளத்திடு மிருதி யெல்லாம். (௩௭)

தேவருங் கடக்க லாகாத் திருவினை யசக்கவி யென்ன
எவருங் கடக்க லாமோ வெகுமி னியம்பா வண்ணம்
இவரும் பாவி தன்னை யுடன்கொண்டு செல்லு கின்றோம்
யாவர்க்குந் தலைமை யான வெழிலுறு கணமே யென்றார். (௩௮)

என்றவர் கூறு மாற்றங் கேட்டவ ரியம்பு கின்றார்
நன்றுநீர் நவின்றீ ரேனு நான்மறை யாளன் றானு
மென்றமர் விமான மீதே யேற்றிடப் படுவோ னானான்
என்றுமே கழுவா யில்லை யீசனை யிகழ்ச்சி செய்தால். (௩௯)

ஆதியு மருவில கண்ட கந்துற மருந்து மாகுந்
தாயினு மினியான் றன்னைத் தாழ்ச்சியே கூறி னானு
மேயின வகையி னாலே மெல்லவே யருநெஞ் செய்வா
னாயவன் மேன்மை தன்னை யாவரே யறியற் பாலர். (௪0)

சயாதரந் தாங்கினான் றந்தை கனகமா வல்லி பங்கன்
றியானிக்கப் படுவோ னிச்சித் திரோ டசித்து மாகி
வியாபகப் பொருளு மாகி விமலனு மனாதி யாகுந்
தயாநிதி திருநெல் வாயிற் றலத்திடை வீற்றி ருப்பான். (௪௧)

அன்னவற் கினிய தாகு மருஞ்சிவ புரத்தின் மாந்தர்
மன்னியே யிருப்பி னன்றி மரித்திடின் மனத்தா லெண்ணி
யென்னருங் கதியை யெய்தி யுவத்தலே யன்றி யன்னார்
பின்னுமோர் பீடை யெய்தல் பெரியவற் கேற்ப தாமோ. (௪௨)

சங்கர னென்னை யென்று சதுர்மறை யிருதி சாற்றும்
பங்கமி லாக மங்கள் பகர்ந்திடு மிதுதான் மெய்யே
சங்கையில் வெளியே யுள்ளே சாதன மிரண்டே யாகு
மிக்கிவை யிரண்டின் முன்ன ரிசைத்தது தாழ்ந்த தாகும். (௪௩)

பின்னது பெரிதே யாகும் பேசிடி னிதுவே திண்ணம்
பின்னதாம் பக்கங் கொள்ளும் பெற்றியு முன்சொல் பக்க
மன்னதன் றெனவுஞ் சொல்வ ராதலிற் றுணிந்தே யாங்கள்
சொன்னது பவாத பக்கந் துணிவன்று நம்ம தென்பீர். (௪௪)

இன்னவா றெடுத்துக் கூறி யியல்பெறு சிவகணத்தார்
சொன்னவி மானத் தோடு துந்துபி முழங்கா நிற்பக்
கின்னரர் தேவர் போற்றக் கிளர்தரு மறையோன் றன்னை
யென்னரும் புகழ்ந்து போற்று மொழிற்சிவ புரத்திற் சேர்க்க. ()

மருத்துவன் பிறவி நோய்க்கு மன்னிய கருணை யாளன்
அருத்திசெய் வாரைக் காக்க வமர்ந்தரு ளுச்சி நாதன்
இருத்தினன் பாத நீழ லிரண்டறக் கலக்கும் பேற்றைக்
கருத்தொடு மிகழ்ந்து கூறிக் கண்ணிணைப் புகழ்ந்தாற் றீந்தான். ()

ஆதலின் மறைகள் வல்லீ ரறைகுவம் விருப்பிக் கேண்மின்
றீதக றிருநெல் வாயில் சிவனமர் மறைவுத் தானம்
பாதமே லிருக்க வைப்பன் பகர்தரு கன்மம் விட்ட
வேதமே புரிந்தா னேனு மிருந்தலத் துறைவ னென்றால். (௪௭)

கற்பனை யன்றி துன்மை கருதிட வேண்டாம் வேத
நற்பய னளிக்குஞ் சித்தி நாடுவோர்க் களிக்குந் தானிற்
பொற்புற மரிப்பின் வாசம் புரிந்திடின் வீடு பேறு
சிற்பர வெளியே யான சிவபுர மளிக்கு மன்றே (௪௮)

வானமர் தருவி னீழல் வாழ்பவன் வான நாடர்
கானமர் கமல மேலான் கருமுகின் மேனி கொண்டான்
ஆனவர் யாரும் போற்றி யமர்தரு தலமா மங்கே
யூனமர் பிறவி நீங்க வுயர்சிவ பூசை செய்மின். (௪௯)

ஒண்மைசா லறிஞர் போற்று மொருவனை யிகழ்ந்த பாவி
தண்மைசா றிருநெல் வாயில் சார்ந்தொரு பனவ னானோன்
வண்மைசா லடியைச் சேர்ந்த வான்கதை புகன்றே மன்னா
திண்மைசா றீர்த்த மாண்புந் தெரிந்தவா செப்ப லுற்றார். (௫௰)

விசுக்கிரன் முத்திபெறு படல முற்றிற்று.

ஆக செய்யுள் ௫௰௫

# தீர்த்த விசேடப்படலம்

பனிமலை பயந்த மாதைப் பாகத்தே வைத்தாய் போற்றி
கனிதரு நெஞ்ச முள்ளார் சாலுறு மொளியே போற்றி
தனிமுதற் பொருளே யீசா தாணுவே திருநெல் வாயி
லினிதமர் பதியாக் கொண்ட வெந்தையே போற்றி போற்றி (௧)

அரனமர் தளியி னுப்ப லுனைந்த வாவித் தீர்த்த
மருவிடு மதுவுட் கொள்வார் மகிழ்ந்திட வின்ப மாக்கும்
பரமனே யதனை முன்னாட் படைத்தன னிடத்தி னாலும்
வரமுறும் பங்க மின்றி வான்சிறப் பெய்தா நிற்கும். (௨)

தேவனுங் கபிலை கஞ்செய் தீர்க்கமு மதுவே யாகும்
பாவமோ டகற்று வெண்ணிப் பவித்திர கங்கை யாதி
தாவிலா நதிக ளெல்லாந் தரணியுந் துவாரணை யாகி
மேவிய காலந் தன்னின் மூழ்குமா றடையு மாதோ. (௩.)

தெளிவொடு தன்மை யாகித் தேனென மதுர யாகிக்
களிப்பினை வளர்த்து வாசங் கமழுறு கமலம் பூத்த
வளப்பிலா னந்த வாவி யமலமாந் தீர்த்தந் தன்றே
உளமகிழ்ந் தன்பி னேறு முத்தம லிங்கந் தன்னை. (௪)

அணிதிகழ் முடியின் மீதே யாட்டினோன் பன்னாட் செய்த
திணிபடு பாவ மெல்லாந் தீயிடைப் பஞ்சே யாக
நணுகுறும் பேற்றை யாவ ணவின்றிட வல்லோ னவான்
மணிமுடிச் சேடன் றானு மதித்திட வல்ல னோதான். (௫)

ஆனந்த வாவி சீரா லாதியம் பகவ னேனே
ஞானந்த மடைதல் போல வாவின்பா னெய்யா லாட்டி
ஞானந்த மடைவ தில்லை யன்னவ னேவ லாலே
யானந்தந் தானே வாவி யானதென் றுணர்வீ ரன்றே. (௬)

இலங்குமா னந்த சத்தி யியைந்திடு தேவன் றூலக்
கலங்கலில் படையாற் கந்தக் காமரு தீர்த்தந் தானு
நலங்கிளர் மகிழ்ச்சி தன்னை நல்கிடு மெனறு வேதந் [ன்.
துலங்குறு வியாசன் முன்னாட் டொகைபெற வெடுத்துச் சொன்றே

அன்னநற் றீர்த்தந் தன்னி லன்புசெய் மனத்தன் மொண்டு
தன்னிழல் பாரா னாகித் தவிர்ந்திடத் துன்ப மெல்லா
நன்னிய மத்தின் மூழ்கி நலம்பெறு மனிதன் சென்னி
தன்னிமேல் கங்கா தேவி சார்வது மெய்யே யாகும். (அ)

கண்டமேற் கறைத் தோன்றுங் கண்ணொன்று நுதலிற் றோன்றுந்
துண்டமாம் பிறையுஞ் சென்னி தோன்றுமே யிடப்பா றன்னி
லெண்டரு மழுவு மானு மிருகர மீது தோன்றும்
விண்டிடற் கரிய தீர்த்தம் விமலனு ருருவ நல்கும். (௯)

உயர்தரு தோத்றம் வேண்டு முத்தமர் தாடக்கை டந்த
பெயர்வறு தீர்த்தந் தோயும் வாஞ்சையு முண்டா மந்தத்
துயரினை யகற்றுந் தோயந் தோய்பவர் முக்க ணீசன்
றுயர்விலா வடிவந் தன்னை யடைவது திண்ண மாமே. (௪௦)

அன்னதன் பெருமை கூற வாண்டுக ணூறு போதா
பொன்னொடு நாகம் பட்டும் பூமியு நெல்லு மாங்க
ணன்பருக் களிக்கு மாந்த ரருஞ்சிவ வடிவங் கொள்வ
ரின்னதை விரித்துக் கூறி னென்பயன் விளையு மோதான். (௪௧)

முத்தியி லாசை யுள்ளான் மூழ்குவ னன்ன தீர்த்தஞ்
சித்தியை நாடி னோனுந் தீர்த்தமே முழுக வேண்டு
மெத்திய பாவஞ் செய்த மனிதரை ஞாளி யூர்தி
யொத்தியல் பாசத் தாலே யொருங்குறக் கட்டிச் செல்வன். (௪௨)

இத்தல வடகீழ்த் திக்கி லிருப்பது சத்தி தீர்த்த
மத்தகு தீர்த்தந் தன்னி லன்புடன் மாசி மாதத்
துத்தம மகத்தின் மூழ்கி யுறுதன மீவோன் றானு
மத்தனார் பாத நீழ லடைந்தினி திருப்பா னன்றே. (௪௩)

குணதிசை யதனின் மேலாங் குமரனார் தீர்த்த மன்னு
மிணங்கிய வியதி பாத யோகத்தி லாரஞனி
லணங்கியல் சங்கி ராந்தி பூரணை யாதி நாளின்
மணங்கமழ் தீர்த்த மூழ்கி மன்னிய சகுதிச் சேர்ப. (௪௪)

மாற்றுயர் செம்பொ னீயின் மன்னிய பாவ நீங்கும்
போற்றிய மறையோர் கொல்லிற் புகுபவம் விரைவிற் போகும்
மேற்றிசை யதனில் வேலோன் மெல்லடிப் பூசை செய்தா
லேற்றமா மிட்ட சித்தி யெய்துவ துண்மை யாமால். (௪௫)

விருப்புடன் வடபான் மன்னும் விளங்குகா விரியாந் தீர்த்த
மருப்பொலி தீர்த்தந் தன்னின் மானுட ரோர்கான் மூழ்கிற்
றிருப்பொலி செல்வ மோங்கித் திசையினர் போற்ற வாழ்ந்தே
யுருப்பொலி யுடலை நீங்கி யொப்பிலாச் சுவர்க்க மாள்வான். (௪௬)

ஆயிடைக் கன்னி செம்பொ னருந்தன மறுவை பூமி
தூயதா னியமு மற்றுந் தொகைபெறத் தானஞ் செய்வோன்
றீயவை யகன்று சித்தத் திருப்பத மருவி வாழ்வன்
மேயவத் தலத்தின் றென்பான் மேவுமங் குட்ட தீர்த்தம். (கஎ)

கண்ணனி கொண்டு முன்பு தகுசிவ னங்குட் டத்தான்
மண்ணனிற் றோன்று கின்ற மாண்பினை யுடைய தாகும்
விண்ணவர் புகழும் பார்த்தன் விமலனோ டடும்போர் செய்யத்
திண்ணிய வன்பின் வீக்கந் தெரிதரு விருப்பி னாலே. [கஅ]

விண்ணிடை யுருண்டை யாக்கி விசின்னன் கிரீடி தன்னை
மண்ணிடை விழுமுன் செந்தா மரைமலர் கழுநீர் மல்கும்
புண்ணிய தீர்த்தந் தன்னைப் புகுபெரு விரலாற் கீறிப்
பண்ணின னதனில் வீழப் பண்ணின னென்ப மன்னோ. [கசு]

பின்னரே யமலன் றானும் பேரரு ளவற்க ளித்து
மன்னிய வேடக் கோலம் மாற்றினன் மாயன் வேதன்
றன்னயல் சூழ்ந்து போற்றத் தன்வடி வெடுத்து நாதன்
பன்னுபா சுபத மாகும் படையையுங் கொடுத்தா னன்றே (உ0)

அன்னமா தீர்த்தந் தோய்ந்தா னவனிமேற் பிறவா னென்று
மின்னுசெஞ் சடையிற் கங்கை மிளிர்மதி சூடி னானை
முன்னுள பொருளுக் கெல்லா முன்னுள பொருளை மூவா
மன்னிய சிவனை யன்பான் மலரடி வணங்கல் வேண்டும் (உக)

மாதுரு கையாந் தீர்த்த மாண்பையு நன்கு சொல்வோ
மாதர வோடு கேண்மி னருந்தவ ரெல்லீர் கண்டீர்
போதுறு நவமி தன்னி லொளிர்புனல் விதியிற் றோய்ந்து
வேதமந் திரமுஞ் செவ்வே விருப்புடன் செபஞ்செய் மாந்தர். ()

பிரமமா வித்தை தன்னைப் பெறுக்குவர் ஈது பொய்யே
மைமுறு கவிஞர்க் கெல்லா மன்னரு மாகி வாழ்வர்
பிரமன்மா தீர்த்த மொன்றைப் பேசிய மேற்கே கண்டான
பிரமமா குண்ட மென்று பேர்பெறு மதுதான் மன்னோ (உ௩)

அந்தமா தீர்த்த மூழ்கி யருஞ்சிவ பத்த ருக்குச்
சிந்தையின் மகிழ்ச்சி பூப்பச் செய்திடல் வேண்டுந் தானம்
முந்துமீ ரயன மற்று மொழிந்திடு விடுவாங் காலம்
வந்ததின் மூழ்கு மாந்தர் வாழ்குவர் பாவ நீங்கி. (௨௪)

கள்ளினைக் குடித்த பாவங் கன்னியைப் புணர்ந்த குற்றந்
தள்ளரும் பாவ மெல்லாந் தவறுத லின்றி நீங்கு
மள்ளிலை நெடுவேல் கொண்டோ னுக்குவை ரவமா தீர்த்தம்
விள்ளுமன் னதற்கு மப்பால் விளங்குறுங் காண்பி ரன்றே. (௨௫)

உத்தம தீர்த்த மாகு முடல்குறை பெருநோ யோதும்
பித்தநோய் கயநோய் தீராப் பெரியநோ யாவும் போகும்
சத்திய மிதுவே யாகுஞ் சாற்றுது மின்னுங் கேண்மின்
சித்தமு மடங்கி நிற்பத் திகழுமங் களவா ரத்தில். (௨௬)

வயிரவ தீர்த்த மூழ்கி வல்லவா தனமூந் தூசு
மயர்வறு சிவயோ கிக்கு வழங்குவோன் றனு மந்த
வயிரவ னருளி னாலே வளர்பெருந் துயர நீங்கிப்
பயங்கர மகன்று போகப் பரிசுத்த மடைவா னன்றே. (௨௭)

அங்கதன் வடபா லாகு மரிபதோர் வசிட்ட தீர்த்தந்
தங்குமத் தீர்த்தந் தோய்வோன் றருமதி கேட னேனு
மங்குத லின்றி யன்னோன் மாதவஞ் சித்தி யாகும்
வெங்கனல் கரத்தி லேந்தும் வாசிட்ட லிங்கந் தன்னை. (௨௮)

மாமுனிக் கணங்க ளேத்து மலரடிப் பத்தி யோடு
மாமுறை நிலமேல் வீழ்ந்தே யரகர வென்று போற்றித்
தோமிலைந் தெழுத்தை யன்பிற் சொன்னவா செபஞ்செய் மாந்தர்
காமுறு பிறவி யெய்தார் காசினி மீது மன்னே. (௨௯)

நாசமி தீர்த்தத் தப்பா னற்றிசை வடக்கே மன்னுங்
காசகல் கணங்கள் போற்றுங் கணபதி தீர்த்த மென்பர்
பேசிய கரையின் பாங்கர்ப் பெருங்கண நாத ரோடுந்
தேசமர் விநாய கன்றான் றிகழுற விருப்பா னன்றே. (௩௰)

ஆவணி மதியி னாரு மவிர்நிலா வளர்ந்து தோன்றுந்
தாவகல் பூர்வ பக்கச் சதுர்த்தியாந் திதியில் வெள்ளி
மேவிய கிழமை மூழ்கி விதிமுறை வழிபட் டேத்தி
யாவயிற் பத்தி யோடு மாயிர மோத கத்தை. (ரு௧)

ஒருத்தன்மா முகத்துப் பிள்ளை யோங்கருள் செய்ய வேண்டி
யருத்துதல் செய்க வன்றி யறுகொடு கருப்பந் துண்டம்
பொரியவ லெய்யுந் தேனும் பொலிவுற வோமஞ் செய்க
பிரியனா யிதனைச் செய்தாற் பேரருள் புரிவ னாதன். (ரு௨)

அன்னவன் கல்விச் செல்வ மரியதோர் பொருளின் செல்வ
மென்பவை யெய்தி வாழ்வ னிருங்கட லுலக மெல்லா
முன்னுறு வசமாய் நிற்கு முன்னொரு ஞான்று தன்னிற்
பன்னுறு புகர்மு கத்துப் பாலனுங் கணங்கள் சூழ. (ருரு)

மழைதவழ்ந் தோங்கும் வில்வமா வனத்தி லெங்குந்
தழைதரு மிறும்பூ தெய்தித் தரித்திலன் றிரிந்தா னாகப்
புழைநெடுங் கரனைப் போற்றும் பொருவிலாக் கணங்க ளோடி
விழைதரு நீரை வேட்டு விடாய்கொடு வருத்த முற்றார். (ருச)

மண்ணிடை மயங்கி வீழ்ந்தார் மற்றது கண்டு நாதன்
விண்ணிடைக் கங்கை நீரை வீறுடன் காத்தா லள்ளி
யுண்ணுமி னென்று கூறி யூட்டலு மன்னோர் தாமுந்
தண்ணிய நீரை யுண்டு தாகமு நீங்கி யுய்ந்தார். (ருரு)

அன்னதோர் கணேச தீர்த்தத் தாடுவோன் யாவ னன்னோன்
றுன்னுபே ரிடையூ றெல்லாந் தொலைந்திடப் பெறுவ னுண்மை
தன்னிகர் தானே யான சாகர தீர்த்தந் தானு
மென்னுமெத் தீர்த்தத் துள்ளு மிசையினாற் பெரிதே யென்பார். ()

யாவனே யெனினுந் தீர்த்தம் யாதொன்றின் மூழ்கி னானு
மாவயிற் சிராத்த மேனு மன்புடன் செய்திட் டானு
மூவெழு குலமு மோங்க வீட்டில கடைந்து வாழ்வான்
மேவிய தீர்த்த மேன்மை முற்றுற மொழிய லாமோ. (ருஎ)

நலமுறு தீாத்த மாண்பை நான்முக விரிஞ்சன் றானும்
பலமுறை விரித்துச் சொல்லும் பான்மைய னாகா னென்ப
தலமது மறைவி னுள்ளுஞ் சாலவு மறைவே யாகு
மிலகுறுஞ் சிறப்பி னாலே யியம்பினே மறைவல் லீரே. (௩௮)

இத்தகு தலத்தைப் போல வில்லெனா வேறெக் காலுஞ்
சத்தியஞ் செய்தி யாமே சாற்றுவ மறைக ளெல்லா
முத்தம தலமா மென்றே யொருமொழி கூறா நிற்கு
நித்தனுஞ் சிவபு ரேச னிமலமா மகிமை தன்னை. (௩௯)

வாக்கினுக் கிறைவன் பாங்கர் வலமிகு சில்லோர் தாமு
மேக்குறு வியாதன் பாலும் வேறொரு சிலவர் தாமுங்
காக்குறு நந்தி பாலுங் கலக்கமில் சனகன் பாலுந்
தேக்குற நன்கு கேட்டுத் தெளிந்தன ராங்கே சென்று. (௪0)

ஒளிதிகழ் வடிவ மான வொப்பிலா மணியை யோங்கு
மளிதிகழ் மனத்தி னானை யன்றினார் புரஞ்செற் றானைத்
தெளிவுறப் பூசை செய்து சித்திகள் பலவும் பெற்றுக்
களிமகிழ் வடைந்து நின்றார் கரைவதென் னினிமேற் கண்டீர் (௪௧)

ஆவயின் வசித்த லொன்றா லமைதருங் கிரந்தி மூன்று
மேவிடா வகையே சிந்தி மெண்மலர்ப் பாத நீழற்
றேவர்க டேவன் கூட்டித் திப்பிய நலஞ்சேர் விப்பான்
பூவமர் தானந் தீர்த்தம் பொலிவுடன் பலவா யுள்ள. (௪௨)

தந்திடு மவற்றி னுள்ளுந் தகுசிவ புரமே லாகு
முந்துபே ரருளளிக்கு முதன்மையைப் பெற்று மன்னு
மைந்தையு மவித்த நல்லீ ரத்தல மகிமை சொன்னேம்
பந்துமார் மோகந் தன்னற பாரினில் யாவ ரேனும். (௪௩)

சிவபுர தலத்தை நாடிச் சிதைப்பரே யாரு லன்னோர்
அவமுறு பிரம கற்ப மைம்பதிற் றிரட்டி காறுங்
கவலருந் துயரந் தன்னைச் சமன்றம ரிழைப்ப மாழ்கிக்
கவர்படு பிறவி யெல்லை கண்டிலர் வருந்து வாரே. (௪௪)

நாடிய தீர்த்தங் கோயி னற்பிரா கார மின்ன
பீடுறப் புதுமை யாக்கிப் பேணுவோ ரயன்மால் போற்ற
வீடியல் வழியைச் சேர்வர் வியன்மதில் புதுக்கு வோரு
நீடுசா ரூப மெய்தி நித்தராய்த் திகழ்வர் மாதோ. (சரு)

பாசிவ னருளே மேனி பழுத்தெனத் திரண்ட தீர்த்தம்
வரமுறு கிருபா சிந்து வான்பெயர் புனைந்து மன்னும்
நரனெவன் தீமை செய்வா னமன்றமர் கருணை யின்றிப்
பெரியதோர் துன்பஞ் செய்வர் பேணுறு மிதனை நீவிர். (சசு)

பையுளை யகற்ற வந்த பாவன தீர்த்தந் தன்னிற்
கையினு னீந்த லாடல் காறியே யுமிழ்த றோய்த்தல்
கையினை மெய்யைக் காலை மலத்தினைக் கழுவ லாகா
வெய்யதே யில்லை செய்தோ னுண்மையீ தாய்வ தென்னே. (சஎ)

ஈசனைக் குருவை நான்கா யியலுறு வேத வாக்கை
நேசமா மனுவை யன்பி னூடுதல் போல விந்தக்
காசகல் கிருபா சிந்துக் கைகண்ட தீர்த்தந் தன்னைப்
பேசரும் பத்தி செய்து பேணுதல் வேண்டு மன்றே. (சஅ)

அந்தணர்க் கொன்ற பாவ மாதியாம் பாவ மெல்லாங்
கொந்தழல் வனத்தீ யந்தக் குவைபடு வனத்தை யெல்லாம்
வெந்திடச் செய்தல் போல விமலமாந் தீர்த்தம் போக்கும்
வந்தொரு பாவி மூழ்கின் மற்றவன் பாவ மாயும். (சகூ)

தீங்கினை யிழையா ராகிச் சிவபுரம் வசிப்பார் தம்மைத்
தேங்கிய கங்கை வேணிச் செல்வனு முமையின் காந்த ன்
பாங்குடன் சிவபு ரேசன் பரபத மமரச் செய்வா
னோங்கிய தீயோர் தம்மை யுடன்றடும் வடுகன் றானே. (ருo)

அந்தணர் தீர்த்தந் தான மாதரம் புரித லின்றி
நிந்தனை செய்த லாகா நிமலனு றிடமென் றோரான்
சிந்தனை யின்றிப் பங்கஞ் செய்திடு மதனு லீசன்
றொந்தன புரிவ னுங்கே நோன்புட னிருத்தல் வேண்டும். (ருக)

முத்தியில் விருப்ப முள்ளார் மொய்ம்மலர் தனமுந் தூசும்
பத்தியிற் பிறவு மீந்து பரமனைப் போற்றல் வேண்டு
மெத்திய செல்வ ருயின் விமலனார் தளியை நீடு
முத்தமப் பணிகள் செய்தே யோப்புதல் கடமை யாமால். (௫௨)

நன்மலர் கொய்து சாத்த நந்தன வனமு மாக்கி
யின்னமிர் சடையா னுக்கு மேன்மையின் விழாவுஞ் செய்தும்
பொன்னவிர் தேரும் வேறும் புலங்கொள வியற்றி வைத்தும்
பன்மணி புனைந்து செய்த பசுமடங் கட்டு வித்து. (௫௩)

செம்பொனால் வெண்பொன் னாலுஞ் செம் பொடு குடமு மாக்கிப்
பம்புமேற் கட்டி யாதி பாங்குற வமைத்து மேலு
மிம்பரும் புகழு மஞ்ச மிடபமே பிறையே வாசி
நம்பனுக் கெனவே யெண்ணி நலத்தகப் புரிதல் வேண்டும். (௫௪)

மணிபெறு தூப தீபம் வளமுறு மால வட்ட
மணிபெறு குடையு மின்ன யானையு மீதல் வேண்டுந்
இணிபெறு மதிலிற் பூண்டு செடிகொடி யாசே யாலே
அணிபெறக் கண்டு நீக்கிக் காண்வரு சாந்து பூசி (௫௫)

திருக்குளப் படியுங் கட்டிச் சிவபத்தர் மகிழும் வண்ண
மெருக்கொடு தும்பை கொய்ந்த விறைவனுக் கியைவ வெல்லாம்
விருப்புட னியற்றி வைப்பின் விமலனுந் தேவி தானு
மிருப்பமே மகிழ்ச்சி பூப்ப வித்தகு பணியா லன்றே. (௫௬)

மாலயன் பதமு மற்றும் வானவர் பதமுங் கூடுஞ்
சாலுமோ வேறொ ராற்றாற் சதுர்மறை பயின்று வல்லீர்
மேலுமே சொல்ல வேண்டும் வீட்டினை விருப்பு மாந்த
ரேலவே சிவபு ரேசற் போற்றியே யிருத்தல் வேண்டும். (௫௭)

வேறு

சிவபுரத்தின் மகிமைதனைக் கூறுங் காதை
செப்பினோ ரகமகிழ்ந்து கேட்டோர் தாமு
நவநிதிச்செல் வப்பெருக்கா னயந்து நாளு
நனிபெருக்கு நோயதனா னலிய மாட்டார்

பலமகற்று மகப்பேறும் பொருளின் பேறும்
பலபோக பாக்கியமும் பல்கி யோங்கும்
அலமகல வறியவருக் கறத்தா லெய்து
மரும்பொருளீந் தன்பராய் வாழ்வார் மன்னோ (ருஅ)

வேறு

இந்நகர்ப் புராண காதை யியம்பிடக் கேட்டோர் தம்மில்
வந்தியேன் மக்கட் பேறும வறியனேற் செல்வப் பேறு
மந்தனே லறிவுப் பேறு மகிமைசால் கல்விப் பேறு
முந்தினேல் வீடு பேறு முதன்மையிற் பெற்று வாழ்வார். (ருகூ)

என்றுமெய்ச் சூதன் சொல்ல விருந்தவ முனிவர் கேட்டே
யொன்றிய சிவபு ரேச னொண்கழல் மறவா ராகிச்
சென்றனா ராங்கே புக்குச் சிவன்றனைப் பூசித் தேத்தி
நன்றறி மாந்தர் போற்று நைமிசஞ் சேர்ந்தார் மன்னோ. (சு0)

ஆவினம் வாழ்க வாழ்க வந்தணர் மறைகள் வாழ்க
கோவினற் செங்கோல் வாழ்க குடிகளுஞ் செழித்து வாழ்க
காவளர் திருநெல் வாயிற் கனகம்மை யுச்சி நாதன்
பூவளர் கமல பாதம் போற்றுமெய் யன்பர் வாழ்க. (சுக)

தீர்த்த விசேடப்படல முற்றிற்று.

ஆ. செய்யுள் சுக

---

சிவபுரி யென்று வழங்குந்

திருநெல்வாயிற்புராணம்

முற்றுப்பெற்றது.

---

# புத்தக விளம்பரம்

இந்நூலினை வாங்க விரும்புவோர் சிதம்பரத்தைச் சேர்ந்த சிவபுரியில் ஷை ஆலய ஜீர்ணோத்தாரணஞ் செய்வித்தவராகிய ஸ்ரீமாந்-க. வீ. சொ. வீ. அழகப்பசெட்டியார் அவர்களிடத்திலும், யாழ்ப்பாணம் கரவெட்டி வடக்கு வதிரியில் ஞானசித்தி அச்சுக் கூடத்திலும் பெற்றுக்கொள்க.